# திருவடி மாலை

(இனிய அருளிசைப் பாடல்களின் தொகுப்பு)




"This book is published with the Financial assistance of Thirumala Thirupathi Devastanams under their Scheme aid to publish Religious books"

" திருக்குமரன் பதிப்பகம் "
" வள்ளுவர் இல்லம் "
10-4-184, சேசாபிரான் தெரு.
சித்தூர்-517001. (ஆந்திரா)

# Date திருவடி மாலை


இயற்றியது : இராமசாமி இளங்கோதாசன்

முதற்பதிப்பு : செப்டம்பர் 1982





பிரதிகளுக்கு : ''திருக்குமரன் பதிப்பகம்''
''வள்ளுவர் இல்லம்''
10-4-184, சேசாபிரான் தெரு
சித்தூர்-517001. (ஆந்திரா)

முகப்போவியம் : இரா. இளங்கோதாசன்

அச்சிட்டது : எம். வி. பி. பிரிண்டர்ஸ்,
18-8/2-4, முத்துமேஸ்திரிவீதி
சித்தூர்-517001.

படிம (Block) உதவி : பிரகாஷ் & கோ., வேலூர்-4.

ATI.

~~இந்நூல்~~ இந்துசமயக் கருத்துக்களை உலகெங்கும் பரப்பிடும் புனிததிட்டத்தின் கீழ் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் வழங்கிய நிதிஉதவியைக்கொண்டு அச்சிட்டது''




கவிஞரின் மற்ற நூல்கள் :—

துடிக்கும் தமிழ்
முருகன் பாமாலை
கந்தனைப் பாடுவேன்
துடிப்பவர் குரல்கள் !

விலை : ரூ. 5-00

" அருள்மொழியரசு "

திரு முருக கிருபானந்தவாரியார் அவர்கள்



அன்பொழுக வழங்கிய

அழகிய சாற்றுக்கவி

## நேரிசை வெண்பா

" இன்னிசைக் கொண்டல் இளங்கோதாசக் கவிஞர்
மன்னுந் திருவடி மாலைதனை - கன்னலெனப்
பாடியளித்தனரால் பண்புடனே ஓதியவர்
நீடியே வாழ்வர் நிலத்து "

பழனி,
22-3-81.

அன்பன்,
கிருபானந்தவாரி

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர், மொழியியல் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் பொன் சௌரிராஜன் M. A. phd. அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

தமிழும் தமிழனும் உயர்ந்தோங்கித்திகழ அன்று சேரநாட்டிலிருந்து கொண்டு காவியம் ஒன்று இயற்றியருளினார் இளங்கோ அடிகளார். அதே நோக்கில் சிறிய அளவாயினும் சிறந்த பக்தி நெறியில் இன்று ஆந்திர மாநிலத்தில் இருந்து கொண்டு இசைப் பாடல்கள் இயற்றி, கவிதை அரங்கேறி தமிழ் மேடைகளில் முழங்கி தமிழும் தமிழனும் சிறப்புற இலக்கிய - உலா வருபவர் கவிஞர் இளங்கோதாசன் ஆவார். இவர் இப்போது தமிழ் உலகிற்கு அருளியிருப்பது "திருவடி மாலை" என்னும் எழுபத்தொரு இசைப்பாடல்கள் கொண்ட அரிய நூலாகும். இந்நூல் தெய்வீகமே முதன்மையுடையதாயினும் சமுதாயம், பொருளாதாரம் என்றும் வேறுபல கருத்துக்களையும் கொண்டு அமைந்துள்ளது. திருவேங்கடமுடையானை சிரமேற்கொண்டு பாடும் இந்நூல் தமிழும் முருகனும் தன் உயிராய், உடலாய்க் கொண்டு திகழ்கிறது.

பண்டைத் தமிழ்ச்சான்றோர் பாடல்களில் எதுகை மோனை முறைகள் எளிய அளவில் அமைந்திருந்தன. இடைக் காலத்தில் இத்தகு உரை நயங்களோடு ஓசை நயம் பல சிறப்புற்றன. பின்னர் இன்றைய தமிழ்க் கவிஞர் பலர், குறிப்பாகத் திரைப்படக் கவிஞர் பலர் பாடல்களில் இயைபுத் தொடை இயங்குதல் சிறப்பாக இருப்பினும் எதுகை மோனைத் தொடைகள் அவ்வளவாக அவற்றில் இடம் பெறுவதில்லை. ஆனால் எதுகை மோனையோடு இயைபுத் தொடையும் இயைய கேட்பார் சிந்தையையும் செவியையும் தன் கவித்திறத்தால் கவர்ந்து இன்புறச்செய்ய நல்ல பாடல் பலவற்றை இந்தத் தொகுதியில் இவர் பாடியருளியுள்ளார்.

"எந்நாடும் அடையாத உயர்வல்லவா? — இது
எளியோர்க்கு எப்போதும் சுகமல்லவா?
எந்நாளும் திருநாளே அங்கல்லவா? — அதை
இரு கண்ணும் கண்டாலே தவமல்லவா?
(பக்-31)

அண்ட சராசரம் எங்கணுமே — உந்தன்
ஆணை யில்லாமல் அசைந்திடுமா?
பண்ட மெல்லாமும் குவிந்தாலும் — உந்தன்
பார்வை படாமல் இசைந்திடுமா? (பக்-76)

இவை எதுகை மோனை யோடியைந்த இவர்தம் இயை புத் தொடை கட்டுச் சில எடுத்துக் காட்டுகளாகும். திருவடி மாலை என்னும் இந்நூலில் அமைந்துள்ள இசைப் பாடல்களில் இன்னொரு சிறப்பும் அமைந்து விளங்கக் காணலாம். ஒவ்வொரு பாடலும் தனித்தனி யாப்பில் அமைந்து பற்பல பண்களில் பாடத் தகுதி பெற்றிருப்பதே அது.

மொழி பெயர் தேய மாகிய இந்த ஆந்திர மாநி லத்தில் இருந்து கொண்டு எத்தனை எத்தனையோ இன் னல் களையும், இடர்ப்பாடுகளையும் தாங்கிக் கொண்டு சற்றும் மனம் தளராது தமிழ்த் தொண்டு புரியும் இவரைப் போற்றி வாழ்த்தி வளர்த்தல் தமிழ் கூறு நல்லுலகின் தனிப் பெருங்கடனாகும், இந்தப் பாடல் கள் மேடைகளில் பாடப் பெறுதலோடு, இசைத்தட்டு களில் இடம் பெறச் செய்தலும், வானொலி தொலைக் காட்சி நிலைய நிகழ்ச்சிகளில் ஒலிக்கச் செய்தலும் அத்தகு கடனுக்கு உரிய ஒரு சில நெறிகளாகும் எனக் கூறி அமைகிறேன்.

18—6—82
திருப்பதி-517602. பொன் சௌரிராஜன்.

# எழுதியவன் பேசுகிறேன் !



1973ல் — என்னுடைய ''முருகன பாமாலே'' அச்சாகிக் கொண்டிருந்தபோது '' துடிக்கும் தமிழைத் தொட்டுப் பார்த்த உங்கள் புலமை இப்போது பக்திக்குத்தான் பயன் படவேண்டுமா? — இந்தக் காலத்திற்கு இது தேவையா? — எழுதுவதற்கு எத்தனேயோ பிரச்னேகள் இருக்க மீண்டும் மீண்டும் பக்தி இலக்கியத்திற்கே நீங்களும் அடிமையாக வேண்டுமா?—என்றெல்லாம் கேள்விக்கணேகளேத் தொடுத்த வண்ணமிருந்தனர் என் நண்பர்கள். சிலர் உங்களுக்குப் பிழைக்கத் தெரியவில்லே! இது உங்கள் கையைக் கடிக்கப் போகிறது என்று கூடக் கூறினர். ஆயினும் எவர் கூற்றையும் செவிமடுத்தாது, கொண்ட கொள்கையே உயிரெனக் கொண்டு ''உலகிலே பக்தியின் ஒரே மொழி தமிழாகும்'' என்று பறை சாற்றிய பேராசிரியர் தனிநாயக அடிகளாரின் அற்புத வழியே அந்த கலியுகக் கண் கண்ட தெய்வமான முருகப்பெருமான் மீது நான் கொண்ட ஆழ்ந்த பக்தி காரணமாகத் துணிந்து என் சொந்தச் செலவிலேயே '' முருகன் பாமாலே'' யை வெளியிட்டேன். பொருள் வகையில் அது இழப்பைத்தான் தந்தது. ஆனல் அந்த அருளாளனேப் பாடியதால் கிடைத்த பட்டங்கள், பாராட்டுக்கள், வரவேற்புகள், வற்ருத அரவணேப்புகள் என் உள்ளத்தை நெகிழவைத்து விட்டன. விளேவு? மாபெரும்

கடல் போல் விரிந்து பரந்து கிடக்கும் தமிழ்பக்தி இலக்கிய உலகில் என்னையும் ஒரு கவிஞனாக தலை நிமிர்ந்து நிற்க வைத்துவிட்டன. அந்த உவகை மேலீட்டில் ஏற்கெனவே இயற்றியிருந்த நூற்றுக் கணக்கான முருகன் பாடல்களில் மற்றொரு தொகுப்பை "கந்தனைப் பாடுவேன்" என்ற பெயரில் என் அடுத்த நூலாக வெளியிட்டிருக்க வேண்டும். அதற்கான பணிகளும் நடந்தேறிவிட்டன. ஆனால் என்ன காரணத்தாலோ அனைத்து வசதிகளிருந்தும் அது இன்னமும் முழுமை பெறாமலிருக்கின்ற நிலையில் சோர்ந்து விட்டிருந்த நான்" வேல்வனின் மாமன் மாலவனின் திருவருளால் இந்தத் "திருவடி மாலை" யை வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறேன்.

இதற்கு மூல காரணமாய் இருந்தவரே என் உற்ற நண்பரும் மக்கள் கவிஞருமான திரு எம். ஆர். சந்திரா அவர்களே ஆவார். ஒரு நாள் அவர், பேச்சு வாக்கில் சோர்வுற்றிருந்த என்னைப் பார்த்து "திருவேங்கடவன் மீது எழுதுங்களேன். தேவஸ்தானத்தின் உதவி பெற்று வெளியிடலாம். என்று யோசனை கூறினார். அந்த அரிய யோசனையில் புதிய ஊக்கமும் உவகையும் கொண்ட நான் அப்போது கிடைத்த கோடை விடுமுறையை வீணாக்காமல் அந்த 45 நாட்களில் மொத்தம் 70 பாடல்களை எழுதி முடித்தேன். ஆனால் மொத்தமும் இதில் இடம் பெறவில்லை. திருவேங்கடவனோடு, திருமுருகன், ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி, ஸ்ரீ ஐயப்பன், ஸ்ரீ சர்வேஸ்வரன் ஆகியோர் பற்றிய பாடல்களும் சேர்ந்த ஒரு கதம்ப மாலையாகவே இத் திருவடி மாலை"யைத் தொடுத்த வெளியிட்டுள்ளேன். இனி அவர் சொன்னது போலவே நூலை அச்சிட திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதி உதவியும் கிடைத்தது. நாட்டிலே மத மாற்றங்களும் அர்த்த மற்ற நாத்திக வாதங்களும் மலிந்துவிட்ட கொடிய சூழ் நிலையில் — சத்திய தத்துவங்கள் புடை சூழ இறைஉணர்வோடே இயற்கையில் தோன்றிய நமது தொன்மை வாய்ந்த இந்து மதத்தின் அறம் பெரும் கருத்துக்களை நாடெங்கும் பரப்பிடும் நல்லதொரு திட்டத்தின் கீழ் இந்நூலுக்கு அருட் கூர்ந்து நிதி உதவி

செய்த திருமலைதிருப்பதி தேவஸ்தானத்தின் நிர்வாகக் குழுவுக்கு என் மனமார்ந்த நன்றியையும், வணக் கத்தையும் முதற்கண்ணே தெரிவித்துக்கொள்கிறேன். அத்துடன் இதிலுள்ள பாடல்கள் பல வற்றையும் தேவஸ்தான சமய மாத வெளியீடான ''சப்தகிரி'' யில் அவ்வப்போது வெளியிட்டு உதவிய அதன் ஆசிரியர் திரு என். எஸ். ராமமூர்த்தி அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

வழக்கம் போல் கேட்ட உடனே இந்நூலுக்கு வாழ்த்துப்பா இயற்றி அருளிய அன்பின் வடிவான அருள் மொழியரசு, இந்தியத் துணைக்கண்டத்தின் ஒருமித்த அறநெறித்தத்துவ வித்தக வேந்தர், ஞான பண்டிதனின் அருளாசி பெற்ற மானச குணசீலத்தவ யோகநாயகன் திருமுருக கிருபானந்தவாரியார் அவர் களுக்கு என் சிரம் தாழ்ந்த வணக்கங்களை சிந்தைகனி யத் தெரிவித்துக் கொள்கிறேன். அவ்வழியே இந்நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கிய திரு வேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத்தலைவர் டாக்டர் பொன்சௌரிராஜன் அவர்களுக்கும் என் குன் றாத நன்றி என்றென்றும் உரியதாகும். அடுத்து இதி லுள்ள அம்பிகையின் பாடல்களில் ''அற்புதங்கள் கொஞ்சும்-ஆயிரம் கண் கொண்ட கருமாரியே — கரு ணைக்கடலே கருமாரித் தாயே! இல்லாத இடம் ஏதம்மா? ஆகிய நான்கு பாடல்களை பிரபல இரட்டை இசையமைப்பாளர்களான சங்கர் கணேஷ், மற்றும் திரு எல். கிருஷ்ணன் (A. I. R.) ஆகியோரைக் கொண்டு இசையமைத்து குமாரி டி. கே கலா திரு கோவை சௌந்தரராஜன் ஆகியோர் இனிமையாகப் பாடிட நீண்டநேர இசைத்தட்டாக வெளியிட்ட கிராம போன் கம்பெனியாருக்கும் குறிப்பாக அதன் ஒலிப்ப திவு அலுவலர் திரு எம். மங்கபதி அவர் களுக்கும் என் இதய நன்றி உரியதாகும்.

இனி என்னை உந்நிலைக்கு உயர்த்தி ஆளாக்க உதவிய நண்பர்கள் பலர் உள்ளனர். இதில் பெரும் பங்கு வேலை மாநகர் '' மாலை முரசு '' நாளிதழின் ஆசிரியர் குழுவையே சாரும். இங்கே அவர்களை என் வீணையை மீட்டி வணங்குகிறேன்.

அவ்வாறே இறைவன் திருப்பணியிலும் ஏற்ற மிகு பிற நற்பணிகளிலும் சிறந்து விளங்கிடும் தரும குண சீலர், இனிய நண்பர் திரு சி. ந. ராஜசேகர் அவர்களுக்கும் என் நன்றி என்றென்றும் உரியதாகும். அத்துடன் இளமை தொட்டே என் ஐம்புலன்களுடன் ஒன்றி வளர்ந்தவர், அன்புக்கொரு உருவமாகவே நின்றவர், நட்பென்னும் வரலாற்றுக் காவியத்தின் நடு நின்ற நாயகனைத் திகழ்பவர், நடமாடும் நற்குணக் குன்றின் குளிர் நிழலாக நானறிந்த நலமார்ந்த நேசத் திலகம், பிசிராந்தையார்க்குக் கிடைத்த கோப்பெரும் சோழனைப்போல், கம்பருக்குக் கிடைத்த சடையப்ப வள்ளலைப் போல், புகழேந்திப் புலவருக்கு வாய்த்த சந்திரன் சுவர்க்கியைப்போல், இந்நூற்றுண்டில் பாரதியாருக்கு வாய்த்த நெல்லையப்பரைப், போல் இந்த எளியேனுக்கு வாய்த்த ஒரு அன்பின் ஒளியோன் சென்னைவாழ் திரு கி. பழனி அவர்களுக்கும் என் இதயயாழிசையின் நன்றியும், வணக்கமும் என்றென்றும் உரியதாகும்.

இப்போதுள்ள அலைச்சல் மிக்க சூழ்நிலையில் பெருங் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் என்னதான் கவிதை ஆற்றல் மிக்கவராயினும், மாற்று மொழிச் சூழலில் இருந்து கொண்டு அதை செவ்வனே வெளிப்படுத்த போதிய வாய்ப்பிருப்பினும்,வீட்டில் தடையற்ற இனிமையான சூழ்நிலையும் உதவ வேண்டுமல்லவா? அவ்வகையில் ''நமக்குத் தொழில் கவிதை நாட்டுக்கு உழைத்தல்'' என்ற பாரதியார் வாக்கிற் கொப்ப என்னை இலக்கியப்பணியாற்ற இனிதே உதவிடும் என் வாழ்க்கைத் துணைவி திருமதி செ. பாவரசிக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, கடைசியாக இந்நூலைக் கண்ணுறும் அறிஞர் பெரு மக்கள் குற்றம் குறை பொறுத்து-அடுத்தடுத்து இதுபோல் நான் மேற்கொள்ளும் தமிழ்த் திருப்பணிகளுக்கு தம் அரிய கருத்துக்களைத் தந்து உதவ வேண்டு மென்று மிகப் பணிவோடு கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

''வள்ளுவர் இல்லம்''
சித்தூர்-517001.

அன்பன்,
இரா. இளங்கோதாசன்.

# முதல்வரின் பொன்னாடை !



30–6–75 அன்று சித்தூர் மாவட்டக் காவலர் திடலில் நடைபெற்ற சிறுபான்மையோர் மாநாட்டில் கவிஞர் இரா. இளங்கோதாசன் அவர்களுக்கு அப்போதைய ஆந்திர மாநில முதலமைச்சர் திரு ஜே. வெங்களராவ் அவர்கள் பொன்னாடை அணிவித்துப் பாராட்டியக் காட்சி.

# நவரச நாயகனோடு !



கலைத்தாய் பெற்றெடுத்த கனித் தமிழ்த் தவப் புதல்வன். காமராஜர் வழிகண்ட நடிக மாமன்னன். எண்டிசையும் போற்றும் நவரச நாயகன் நடிகர்திலகம் பத்மஸ்ரீ சிவாஜி கணேசன் அவர்களுக்கு 1—10—77ல் கவிஞர் இளங்கோதாசன் அவர்கள்தான் இயற்றிய தேவி ஸ்ரீ கருமாரி அன்னையின் பாடல்கள் அடங்கிய முதல் இசைத்தட்டை வழங்கி ஆசி பெற்ற அரிய காட்சி !

I am not well versed in Tamil. I could just read and write. But I have the intuition to feel its beauty, its sweetness and its Strength.

Our friend Ilango dasan is a poct of repute in the Tamil world. The tittle "Innisai Kavimani" adorns him. I donot Know how to discribe such, a great man. He is not just an acquaintance but an intimate friend to me. He has a gracious heart. Accordingly, we are made to feel the Fragrance emitted from the red and white Lotuses in the floral wreath of his magnum opus "Thiru vadi maalai"

With the Fondest hope of getting many more such books from the strokes of his pen. I wish my good friend with grateful thanks for introducing me to you. Tamil lovers.

Chittoor. Praja Kavi M. R. CHANDRA,
11-9-82 Editor "Palleseema"

"கவிஞர் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்தவராயினும், அன்னைத் தமிழில் ஆழ்ந்து கண்ட புலமையும், அதைவிட ஐயன் முருகப் பெருமான் மீது கொண்ட பற்றும் பாசமும் இனிய எளிய எழிலார்ந்த பக்திப் பாடல்களாகப் பிறந்து வர, அவரை ஒரு சிறந்த கவிஞராக அறிமுகப் படுத்துகின்றன. அந்த அறிமுகத்தில் ஏற்கெனவே பல பாராட்டுக்களைப் பெற்று இசைத் தமிழுக்குத் தளராது தொண்டாற்றி வரும் கவிஞர் இளங்கோதாசனை தமிழினம் தவருது ஆதரிக்க வேண்டும்.

— புலவர் திலகம் " கீரன் "
( திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் )

# கவிஞரைப் பற்றி சில கருத்து மணிகள் !

"திடுக்கிடும் சம்பவப் பின்னல் எழுத்தாளர்
இளங்கோதாசன்"
— டாக்டர் கலைஞரின் "முத்தாரம்" (15—8—69)

"தாங்கள் பாடல்கள் முதலியன இயற்றுவதுபற்றி நான் எவ்வளவோ மகிழ்ச்சி அடைகிறேன். அதிலும் தமிழ், தெலுங்கு இரு மொழிகளிலும் புலமை இருப்ப தென்பது அபூர்வம் தங்களைப் போன்ற ரத்தினங் களுக்கு நிச்சயம் ஒரு நல்ல காலம் வரும் !

குணச்சித்திர நடிகர் பத்மஸ்ரீ வி. நாகையா
சென்னை-17 (29—6—66)

தங்கள் "துடிக்கும் தமிழ்" கவிதைகள் முழுவதும் நேற்றிரவுதான் ஓய்வாகப்படித்து முடித்தேன். ஒரு சில இடங்களைத் தவிர நூல் முழுதும் துடிக்கும் தமிழ், சிறகுகட்டிப் பறக்கின்றது.

— பாவலர் த. கோவேந்தன்
ஆசிரியர் "கவிஞன்"
வேலூர் (10—11—55)

"கற்கண்டுக் கவி பாடும் இளங்கோதாசன்
கருத்தினிலே அண்ணாவின் தாசன் ஆவார்
சொற் சுவையும் பொருட் சுவையும் அணியும் யாப்பும்
சொக்க வைக்கும் இவர் கவிதை படிப்போர்
நெஞ்சை"

(10—5—73)

— புலவர் மு. அன்பரசன்
கல்வி வெளியீடு
சென்னை-13.

“ தியாகராஜ சுவாமிகள், முத்துசாமி தீட்சிதர், சாமா சாஸ்திரி ஆகிய சங்கீதமும் மூர்த்திகள் தோன்றி கர்நாடக சங்கீத முறையில் சாகித்தியங்கள் இயற்றத் தொடங்கிய பின்னர் இசையுலகில் ஒரு புதிய சகாப்தமே உதயமாயிற்று. அப்புதிய இசைமரபை மேற்கொண்டு இராமலிங்க சுவாமிகள், கோபாலகிருஷ்ண பாரதி, சுப்பிரமண்ய பாரதி, மாம்பழக் கவிச்சிங்க நாவலர், உடுமலை முத்துசாமிக் கவிராயர், துரைசாமிக் கவிராயர் முதலியோர் பாடியிருக்கும் புத்தம் புதிய இசைப்பாடல் முறையில் இளங்கோதாசன் பாடியிருப்பது பாராட்டு தற்குரியது.

— பேராசிரியர் நாரணதுரைக் கண்ணன்
சென்னை-94 (21 – 2—73)

பாடல்கள் மிக நன்முக அமைந்து நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. நம்முடைய பக்திச் சுடரும் ஒளிவிட்டு எழுகின்றது. பொதுவாகப் பல நற்கருத்துகள், நல்லுணர்ச்சிகள், அழகிய உவமைகள் வாயிலாகவும் முருகனுடைய அருங்குணங்களையும், அவனுடைய கருணைப் பெருக்கையும் வெள்ளம் கோத்து மடைதிறந்து முருகனடியார்கள் மீது பாயும் பெரும் திறத்தையும் எடுத்துக் காட்டியும் அவற்றில் நம்மையும் ஈடு படச்செய்கின்முர். ‘‘தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்ன கொல்மாலைகளைத் தொடுத்த கலையுள்ள மல்லவா! வளர்க ஆசிரியரின் கவித்தொண்டு

— பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்
திருப்பதி (20—4—73)

‘‘பண்புகளில் சிறந்தது பணிந்திடும் பண்பு என்கிருர்கள் பெரியோர்கள். அதுதான் முத்தியைத்தருவது. அந்தப் பண்புடன் கவிதைப் பண்பும் சிறந்த இளங்கோதாசன் எல்லா நலன்களும் பெற்றிட முருகப் பெருமான் அருளுமாறு சிரம்தாழ்த்தி வேண்டுகிறேன்.

குணச்சித்திர நடிகர், கலைமாமணி எஸ். வி. சுப்பையா
சாரதா ஸ்டுடியோ, சென்னை-26 (7—5—75)

''முத்திளங்கோ தாசன் மொழியும் கவியெல்லாம்
புத்தமுதம்! பொற்பேழை! பூங்கொத்து — நித்தம்
நமை மயக்கும்! நல்ல நயமளிக்கும்! நாளும்
இமையம் போல் நிற்கும் இனிது''

— ஆலந்தூர் கோ. மோகனரங்கன்
சென்னை-16 (20—8—82)

''ஆசிரியர் ஆந்திர மாநிலத்தில் இருந்தாலும் அன்னைத் தமிழில் பக்திப் பெருக்கோடு பன்னிருகையன் மீது பாடப்பட்டுள்ள கவிதைகள் சிறப்பாக அமைந்துள்ளன. முருகன் மீது மோகம் கொண்டு பாடிப் பரவசமடைய விழைவார்க்கும், இசைப்பாக்களை விழை வார்க்கும் பயன் அளிக்கக் கூடிய தொரு தொகுப்பு''

— தினமணி

''முருகக் கடவுளைப்பற்றிய இசைப் பாடல்கள் அடங்கியது இந்நூல். முருகனைப்பற்றி உள்ளம் உருகப் பாடியுள்ளார் ஆசிரியர் நெஞ்சையள்ளும் இசை, உள்ளத்தைத் தொடும் வரிகள்.

— தினத்

தமிழில் இசை நூல்கள் இல்லாமல் போய்விடுமோ என்று ஏங்கிய காலமும் ஒன்றுண்டு. ஆனால் இன்று அதில் பிரகாசம் தோன்றியுள்ளது. இரா. இளங்கோ தாசன் எழுதிய கவிதைநூல் அதற்கு ஆதாரம். கவிதைகள் பக்தியைச் சுரக்கின்றன. பாடுவதற்கு இனிமையாயிருக்கிறது.

— மாலை முரசு

திரு முருகன் திருமார்பில் பாமாலை சூட்டி நம்மை யெல்லாம் மகிழ்விக்கிறார். இளைஞர் சித்தூர் கவிஞர் இரா. இளங்கோதாசன் அவர்கள். ஒவ்வொன்றும் மணி மணியாய் அமைக்கப்பட்டுள்ளன. கந்தப் பெருமானின் பெருமைகளை சொல்நயத்துடன் பாமாலையாகப் புனைந்துள்ளார். ஆன்மீக விருந்தளிக்கும் ''முருகன் பாமாலை'' முருக பக்தர்களுக்கு மன அமைதியையும், மகிழ்ச்சியையும் அளிக்கும் ஒரு தெய்வீக அருளாய் விளங்குகிறது.

— குண்டூசி

சென்னை (15—8—73)

''இத்தனைச் சிறிய வயதில் நெஞ்சுருக பக்திப் பெருக்கோடு இயற்றி இருப்பது கண்டு உளம் மகிழ்ந்தேன். அந்தப் பாடல்களை அவர் நவரத்தினங்களாகவே இழைத்து அலங்கரித்து மகிழ்ந்திருக்கிறார். இங்கு இளங்கோதாசன் என் மாணவன் என்று கூற பெருமைப் படுகிறேன். மாணவப் பருவத்திலேயே அவரிடம் இந்த ஆற்றல் இருந்தது. இப்போது அந்த ஆற்றலானது பழுத்து பக்குவநிலை அடைந்திருப்பது கண்டு எனக்குப் பரிபூரண ஆனந்தம் ஏற்பட்டது. வாழ்க அவர் கவித்திறன்! வளர்க அவர் புகழ்.

— ஹரிகேச நல்லூர் எம் வைத்தியலிங்க பாகவதர்

(சங்கீத கலாநிதி ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர் அவர்களின் குமாரர்.)



# மாலையிலுள்ள மலர்கள்!

—:o:—





# இறைவா!

ஆதிபகவன் முதற்றே அனைத்துலகின் நிலை என்று
அருள்வாக்கால் உலகை அரசாண்ட பாவலன்
நீதிமிகும் வள்ளுவனின் நேரான பாதையில்
நெஞ்சை செலுத்தி நின்னையே பாடுகிறேன்
நிகரிலா இறைவா! காத்திடுவாய் நினைத்து!!

ஓம் சக்தி ஓமென்று ஓங்காரம் ஒலித்திட
உயர் நிலைக் கவியாலே உழைத்திட்ட மாகவிஞன்
ஆம்! சக்தி தாசனெனும் பாரதியின் அடிச்சுவட்டில்
அடியேனும் ஏதோ அன்பால் பாடுகிறேன்
அமரர் பெருமானே! ஆதரிப்பாய் அணைத்து!!

அன்பின் பெருக்காலும் ஆற்றல்மிகு தவத்தாலும்
அருளாளனே! உன்னை ஆழ்வார்கள் நாயன்மார்கள்
என்பும் உருகிடப் பாடிச்சென்ற வழியிலே
இளையேனும் எண்ணிப் பரவியே பாடுகிறேன்
எங்கும் நிறைந்தோனே! ஏற்றருள்வாய்எடுத்து!!

எத்தனையோ அடியார்கள் இன்னிசைக் கவிஞர்கள்
இதயத்தை அவர்க்காக ஈந்திட்ட வள்ளல்கள்
முத்தனைய தொண்டர்கள் மற்றுமுள நல்லார்கள்
முனைந்திட்ட வழியிலே மூடனும் பாடுகிறேன்
மூலவனே! இவனையும் காத்திடுவாய் முனைந்து !

அனைத்திலும் தாழ்ந்தவன் அஞ்ஞானம் சூழ்ந்தவன்
ஆனாலும் உன்னடிகள் தம்மையே உயிரென
நினைத்து நினைத்துமே நானறிந்த தமிழிலே
நித்தமும் வணங்கி நாவாரப் பாடுகிறேன்
நீதியின் நாயகனே! நிழலாவாய் நீயே!!

# திருவடிமாலை

## பல்லவி

ஏழை தொடுத்துவந்த மாலை இதே—இறைவா!
ஏற்றென் குறைகளைக் கேட்டருள்வாய்!

## அநுபல்லவி

மாழை மிகுந்த உன் திருவடிகள் தமக்கு
மகிழ்வுடன் சூட்டிடத் தவமிருந்தேனே! — ஏழை ||

## சரணம்

ஏழை எளிய மக்கள் வாழ்க்கை வளம்பெற
இல்லாமைக் கொடுமை இல்லாமல் ஒழிந்திட
பேழை கொண்டோர் அகந்தை வேரோடு பெயர்ந்திட
பேதைகளின் சார்பில் பிரார்த்தனைகள் செய்து
— ஏழை ||

சாதிகள் பேதங்கள் தழைக்காமல் சாய்ந்திட
சமுதாய சீர்குறைகள் வளராமல் காய்ந்திட
நீதியின் மணியோசை நாடெங்கும் ஒலித்திட
நலிந்தவரின் சார்பில் விரதங்களே புரிந்து
— ஏழை ||

அறத்தை அழிப்போரின் ஆணவம் முறிந்திட
அரக்கரின் பிறப்பாக இருப்போரும் அழிந்திட
மறத்தின் கொடுமைகள் முளைக்காமல் செய்திட
முன்னவர் பாதையில் வணங்கியும் துதித்தும்!
— ஏழை ||

நாத்திக நாவுடையார் நலிந்துனை உணர்ந்திட
நாளெல்லாம் உந்தன் திருநாமம் முழங்கிட
தோத்திரம் பாடிடும் தமிழென்றும் துலங்கிட
திவ்ய சொரூபனே! தேவர்கள் பெருமானே!!
— ஏழை ||

# நாலு துணை !

சிவ சிவ என்றே ஒருமுறை சொன்னாலே
சிந்தையில் ஆனந்தம் பொங்கும் ! — எந்த
பவவினை யாயினும் அதனால் ஓடும்
புண்ணியமே விரைந்து கூடும் — புவியில்
பழமறைகள் யாவும் பாடும் ! — சிவ ll

நாராயணா நம என்றுளம் நவின்றாலே
நலி வெல்லாம் நீங்கிப் போகும் ! — அந்த
பாராயணம் செயும் மகிமை ஒன்றாலே
பொங்கிடும் செல்வங்கள் சேரும் — வாழ்க்கை
பொன்னெனவே பெருமை மீறும் ! — நா ll

ஆதி பராசக்தி அன்னையை துதித்தாலே
அல்லல்களே வணங்கிப் போகும் ! — பெரும்
நீதியும் கிடைக்கும் நிம்மதி பெருக்கும்
நிமிர்ந்தே வாழ்ந்திட லாகும் — என்றும்
நிழல்தரும் அவளின் பாதம் ! — ஆதி ll

வேலினை ஏந்திய முருகனை நினைத்தாலே
வெற்றிகளே வணங்கி சூழும் ! — அந்த
வேலும் மயிலும் துணையாய் யிருக்கும்
விதியையும் வென்றிட முடியும் — கருணை
வடிவினன் அவனால் குளிரும் ! — வேலி ll

# பக்தி ஒன்றே !

## பல்லவி

பக்தி ஒன்றே வாழ்வில் சுகமளிக்கும் — தூய
பக்தி ஒன்றே வாழ்வில் சுகமளிக்கும் ! — பக்தி ||

## அநுபல்லவி

சக்தியைக் கூட்டிடும் சாந்தத்தை ஊட்டிடும்
சகதி எனும் உலகில் சரிபாதை காட்டிடும் ! — பக்தி ||

## சரணம்

தருமத்தைக்காட்டிடும் தாய்மையை மீட்டிடும்
தவறுகளை ஓட்டி நேர்மையைக் காட்டிடும்
கருமத்தை நீக்கியே கருத்தினைப் பெருக்கி
கண்களுக்கு நல்ல காட்சியைக் காட்டிடும்! — பக்தி ||

விலங்குகள் அறியாத உணர்வுகள் கொண்டு
வாழ்ந்திடும் மனிதர்க்கு ஞானமிதென்று
கலங்கிடும் நெஞ்சினில் கவலையைப் போக்கி
காரிருள் நீங்கிய ஒளியினைச் சேர்க்கும் ! — பக்தி ||

பகுத்தறிவின் ஏற்றம் வளர்ந்து விட்டாலும்
புதுமையில் வியப்புகள் பெருகிவிட்டாலும்
தொகுத்தறிவின் மூலம் தூயோன் தானென
தெளிவினையேதந்து முக்தியையும் வழங்கும்!—பக்தி||

எந்த வயதினிலும் இதுவே இனிக்கும்
எல்லா உயிர்களுக்கும் இதுவே சுகிக்கும் !
சொந்த பந்தங்கள் சுக போகச் செல்வங்கள்
சிந்து இசைத்தாலும் இறைவனையே துதிக்கும்! பக்தி ||

# தேவனே போற்றி!

திருப்பதி மலையில் திகழும்
　　திருவிருத்த மணியே போற்றி !
திருப்பதிக மலர்கள் கொஞ்சும்
　　தீனவர் தலைவா போற்றி !
திருப்பாற் கடலை விரும்பித்
　　துயின்றிடும் துணைவா போற்றி !
திருப்பாவை மாலை கொண்ட
　　தேவனே போற்றி ! போற்றி !!

திருமலை தன்னில் வாழும்
　　தெய்வமே ஆளுய் போற்றி !
அருமலை என்று வேண்டி
　　அண்டினோர்க் கருள்வாய் போற்றி !
பெருமலை இதுவே என்று
　　பேணினோர்க் கிருப்பாய் போற்றி !
வெருவலை அகற்றி வாழ்வில்
　　ஒளியினைப் பொழிவாய் போற்றி !!

வேலினைத் தாங்கும் மருகன்
　　வேலனை உடையாய் போற்றி !
நாலையும் கடந்தார் தம்மின்
　　நாவினை அடைவாய் போற்றி !
ஞாலத்து உயிர்கட் கெல்லாம்
　　நம்பிக்கைத் தருவாய் போற்றி !
கோலத்திரு மகளை யணைந்தோய்
　　கோவிந்தா போற்றி ! போற்றி !!

# எம்பெருமானே !

பல்லவி

ஏழுமலை வாழும் எம்பெருமானே நீ
இன்னமும் இரங்காமல் இருப்பாயோ ?

அநுபல்லவி

வாழும் வழியின்றி வாடிடும் ஏழைக்கு
வழிகாட்ட வேண்டியதை மறந்தாயோ ?— ஏழு||

சரணம்

தந்தையே நீ யென்று நம்பிவந்தேனே !
தினமும் அதனால் மகிழ்ந்து நின்றேனே !
சிந்தையே உனதென்று சிரம் பணிந்தேனே !
சீதரனே இதை மறந்ததும் ஏனோ ! — ஏழு||

வாரமும் தவறாமல் நோன்பிருந்தேனே !
வாழ்த்துரைகள் பாடி உளம் மகிழ்ந்தேனே!
நேரமும் பிறழாமல் தவம் புரிந்தேனே !
நெடியவனே இதை மறந்ததும் ஏனோ? — ஏழு||

தாழவும் தளரவும் நான் பிறந்தேனா?
தவிக்கவும் துடிக்கவும் கேட்டு வந்தேனா?
வாழவும் உயரவும் மற்றவர் தானா?
வையகத்தில் உன்னை நம்பியதும் வீணா?— ஏழு||

# திருமலைவாசா !

## பல்லவி

கலை எழில் கொண்டாடும் திருமலைவாசா !
கண்கண்ட நேசா ! ஸ்ரீ வெங்கடேசா !! — கலை||

## அநுபல்லவி

சிலை எழில் நின்றாடும் நீலப்பிரகாசா !
சிந்தனைகுளிர்ந்திடும் சீருயர்நேசா ! — கலை||

## சரணம்

திருமகள் தழுவிடும் தேரலங்காரா !
திருவருள் கொஞ்சிடும் சுகுணசிங்காரா !
பருவத்தை நடத்திடும் சர்வாதிகாரா !
பாட்டுக்கு மயங்கிடும் சுந்தராகாரா !! — கலை||

வேண்டிய வரங்களை வழங்கிடும் கண்ணா !
வேதத்தில் உலவிடும் கார்முகில்வண்ணா !
தூண்டிய உணர்வினில் சுடராய் இயங்கிடும்
சிவசக்தி தேவியின் சீர்மிகும் அண்ணா !!—கலை||

குழலின் ஓசையில் உந்தனைக் கண்டேன்
கோதிடும் தென்றலில் கருணையை உண்டேன்
முழவொடு தாளமும் முழங்கிடும் துதியினில்
மோகனப்பாசுரங்கள் மருவிடக்களித்தேன்!! - கலை||

# உலகளந்த உத்தமனே!

## பல்லவி

ஓங்கி உலகளந்த உத்தமனே ! — எங்கள்
வேங்கட மலைவாழும் தத்துவனே ! — முத்தே !! — ஓங் ll

## அநுபல்லவி

ஏங்கிடும் அடியார்க்கு நித்தியனே ! — வேண்டும்
இதயங்கள் இனிதாக்கும் அச்சுதனே ! அரியே !! — ஓங் ll

## சரணம்

பாற்கடலில் உதித்த திருமகளை மணந்து
பாருக் கெல்லாம் பொருளை வழங்கிநின்ருய் ! — சக்தி
வேற்படை யுடையானை மருகனுய் கொண்டு
உள்ளம்குளிர்ந்திட உயர்ந்துநின்ருய்! பதியே—ஓங்ll

திவ்வியப் பிரபந்தம் தழுவியணைத்திட
தமிழுக்கு வசமாய் மயங்கி நின்ருய் ! — நல்ல
செவ்வியத் திருவடிகள் திருவருளைப் பொழிய
செழுமையும் சுகத்தையும் அரும்[illegible]
நிதியே!- ஓ

பாதை தெரியாத மக்களுக்கே புரிய
பார்த்தன் மூலமாய் போதம் தந்தாய் ! — அந்த
கீதை எனும் வேத சாரத்தையே பிழிந்து
கண்களுக் கொளியாய் கருணை செய்தாய் !
மணியே!- ஓங்ll

# ஸ்ரீ வெங்கடேசா !

## பல்லவி

உன் தீர்த்தப் நோய்தீர்க்கும் மருந்தல்லவோ?— என்றும்
உன் நாமம் சொன்னாலே சுகமல்லவோ? — உன் ||

## அநுபல்லவி

என்வார்த்தைக் கவியாகி திருமாலை மணக்க
எல்லோர்க்கும் அருளீயும் ஸ்ரீவெங்கடேசா ! — உன் ||

## சரணம்

மலை ஏறிவந்தாலே நலமல்லவோ?— ஒரு
மனதாகத் தொழுதாலே பலமல்லவோ?
தலை ஏறி விளையாடும் விதியல்லவோ?—அது
தறிகெட்டு ஒளிந்தோடும் அருளென்னவோ ? —உன் ||

பூமாலை தொடுத்தாலே கெடுமல்லவோ?— ஒரு
பொன்னாரம் தொடுத்தாலும் படுமல்லவோ?
பாமாலை அதற்காகத் தொடுத்தல்லவோ? — இன்று
பணிவோடு படைத்தேனே மகிழ்வல்லவோ? — உன் ||

காத்திடும் கருணைக்கு நீ தானய்யா ! — மலர்க்
கன்னியை மணந்ததும் நீதானய்யா !
பூத்திடும் புன்னகைப் பெருமாளய்யா ! — உன்
பாதங்களை வேண்டிவந்தேனய்யா ! — உன் ||

# ஸ்ரீ வைகுந்தா !

ஆயிர மாயிரம் படிகளைக்கடந்து
ஐயா ! உன்னிடம் வந்தேன் ! — இந்த
நாயினும் கீழோன் நலிவதைப்பார்த்து
நலம்செய்யவேண்டுமய்யா!— ஸ்ரீ வைகுந்தா!- ஆயி||

வாழ்வதற்கில்லாமல் வழிகளுமறியாமல்
உன்னையே காணவந்தேன் ! — இந்த
தாழ்ந்தவன் என்போனைதகுதியும் அற்றோனை
தாங்கிக்கொள்ளவேண்டுமய்யா!-ஸ்ரீவைகுந்தா!ஆயி||

மலைகளின் பாதையில் முட்களின் சாலையில்
மண்டியிட்டு நான்நடந்தேன் !— தெய்வ
மலைகளின் தலைவா ! மங்கையின் கணவா !
மனம்வைக்க வேண்டுமய்யா!—ஸ்ரீவைகுந்தா!- ஆயி||

திருமலைவந்தாலே துன்பங்கள் தீரும்
தன்மையை நான் உணர்ந்து -- உந்தன்
பெருமலை ஏழினை நடந்தே அடைந்தேன்
பேதை என்னைப்பாருமய்யா!- ஸ்ரீ வைகுந்தா!- ஆயி||

நித்தியம் நீ என்று நெஞ்சைத்தெளிந்து
நிம்மதிகொண்டுவந்தேன் ! - இந்த
சத்தியம் நிலைத்திட சர்வமும் குளிர்ந்திட
சரி என்று வாருமய்யா ! — ஸ்ரீ வைகுந்தா! —ஆயி|

# பாடுகிறேன் !

இனிய தமிழ் சொல்லெடுத்து
இசையமுதில் குழைத்தெடுத்து
கனியக்கனியப் பாடுகிறேன்
கார்மேக வண்ணனையே ! — இனி ||

புதிய முறையில் கவி எடுத்து
பொங்கு மன்பைக் கூட்டிவைத்து
பதியப் பதியப் பாடுகிறேன்
பாண்டவர்க்குத் தோழனையே !— இனி ||

சூடிக்கொடுத்த ஆண்டாளின்
சுந்தர இசைநடை பயின்று
நாடித்தேடிப் பாடுகிறேன்
நமது தெய்வம் மாயனையே ! — இனி ||

அழகு முருகன் அலை நினைவில்
அடுத்து எழுதும் முயற்சியிலே
பழகிப்பழகிப்பாடுகிறேன்
பண்பு கொஞ்சும் அரங்கனையே ! — இனி ||

திருமலையின் நினைவு கொண்டு
திருமாலையின் மணம் நுகர்ந்து
உருகி உருகிப் பாடுகிறேன்
ஓங்கும் சக்ரதாரியையே ! — இனி ||

# வரவேண்டும் ஒருநாளே!

ஸ்ரீதேவி நெஞ்சத்தில் சிங்கார மஞ்சத்தில்
சீராக வீற்றிருக்கும் கோவிந்தா! — உந்தன்
மாதேவி அருளாலே எளியோர்கள் நலமாக
மழை போலும் தரவேண்டும் வைகுந்தா! — ஸ்ரீ॥

அழகான மலைமீது ஆனந்த அலைமோத
அன்பாகக் காத்திருக்கும் திருமாலே! — உந்தன்
பழமான உள்ளத்தின் பதமான அருளாலே
பாரெங்கும் நடத்திடு திருநாளே! — ஸ்ரீ॥

வேதாந்த சிகரத்தில் ஒய்யார வடிவத்தில்
உலகத்தைப்பார்த்திருக்கும் பெருமாளே! — உந்தன்
நாதாந்த பதத்தாலே நல்லோர்கள் செழித்தாட
நீயாக வரவேண்டும் ஒருநாளே! — ஸ்ரீ॥

ஆழ்வார்கள் இல்லத்தில் பாசுரத்துப்பல்லக்கில்
அழகாக அமர்ந்திருக்கும் சாரங்கா! — அந்த
ஆழ்வார்கள் துணையோடு அடியேனும் கவிபாட
அருளாசி தரவேண்டும் சீரங்கா! — ஸ்ரீ॥

சங்கார சக்கரத்தில் சழக்கர்கள் சிதைந்தோட
சான்றோரைக் காத்துவரும் நெடியோனே! — அந்த
மங்காத புகழுக்குப் பாமாலை நான்போட
மாத்தமிழைத் தரவேண்டும் வடிவோனே! — ஸ்ரீ॥

# திருமலைத் தென்றல்!

## பல்லவி

திருமலைத் தென்றல் தவழ்ந்திட மன்றில்
திருமால் நினைவே பொங்கு தய்யா!

## அநுபல்லவி

பெருமலை போலே நெஞ்சமும் பெருகிட
பக்தியின் அலையே புரளுதய்யா! —என்னில்! — திரு||

## சரணம்

துளசியின் நறுமணம் கமழ்ந்திடவே—அங்கு
தூபமும் தீபமும் நிகழ்ந்திடவே
குளுமையில் பூக்கள் குலுங்கிடவே — தங்கக்
கோபுரக் கலசங்கள் தெரிந்திடவே!—தெய்வத்—திரு||

மங்கள நாதம் முழங்கிடவே—அன்பு
மக்களின் உள்ளம் மயங்கிடவே
தங்கமும் வைரமும் மின்னிடவே— அந்த
திவ்விய சொரூபம் துலங்கிடவே! — அருள் – திரு||

கண்கள் செய்திடும் பாக்கியமோ?—
கலியுகம் வேண்டிய பெருவரமோ?
பண்கள் பொழிந்திடும் இலக்கியமோ? — பெரும்
பாசமும் நேசமும் இணைந்திடவே! —எழில்! — திரு||

# வாழ்த்தி வணங்குவோம்!

### பல்லவி

வடக்குமலையானே! வேலவன் மாமனே
வாழ்த்தி வணங்கிடுவோம்!

### அநுபல்லவி

கடக்க ஒண்ணாத நம்
கவலைகள் தீரவும்
மடக்க முயலும் விதி
தன்னையும் மீறவும! — வட॥

### சரணம்

ஏழை எளிய மக்கள்
இனிமையில் வாழ்ந்திட
பேழை மறைத்த பேர்கள்
பெருமனம் சூழ்ந்திட
வாழ நினைக்கும் மக்கள்
யாவருமே ஒன்ருய்
பாழும் குணங்கள் நீங்கி
பண்பாடு மேலோங்கி
ஊழையும் எதிர்த் திங்கு
உயர்வாக விளங்கிட! — வட॥



# அருள்வாயே!

துளசிமாலை மணம்கமழ தூயசெய்யாள் மனம்குழைய
திருப்பதியில் திகழுமெங்கள் திருமாலே! — எங்கள்
துயரமெல்லாம் போக்கிடவே அருள்வாயே!! —துள॥

பாட்டுமாலை புரண்டுவிழ! பக்தியுள்ளோர் திரண்டுவர
பாசமுடன் திருமலையில் ஒளிர்வோனே! — எங்கள்
பாவ மெல்லாம் போக்கிடவே அருள்வாயே! —துள॥

பாற்கடலில் அலைபுரள! பாம்பணைமேல் நீதுயில
பரம்பொருளாய் அரும்பொருளாய் இருப்போனே!—
எங்கள்
பக்கம்வந்து காத்திடுவாய் கருத்தோனே! — துள॥

அன்பு வெள்ளம் ஆர்ந்துலவ அருட்கடலாய் நீ இலக
அடியவரைக் காச்கவந்த அலங்காரா! — எங்கள்
அவதியெல்லாம் நீங்கும்நிலை ஆகாதா? — துள॥

ஆழ்வார்கள் பாமழையில் அகமெல்லாம் குளுமையுற
அள்ளி அள்ளி வரமளிக்கும் ஜெகந்நாதா! — இங்கு
அட்டகாச அரக்கர் கொடுமை தீராதா? — துள॥

பத்தவதாரம் கொண்டுபார்முழுதும் காக்கவென்று
பாதகரை வென்றுநின்ற பரந்தாமா! — இந்தப்
பேதைமக்கள் இக்கதியே விடலாமா? — துள॥

# அன்பானதெய்வம் !

## பல்லவி

திருமாலே மனதார வணங்கி — தினம்
திருநாளாய் கொண்டாடுவோம் !— திரு||

## அநுபல்லவி

அருளுக்கும் பொருளுக்கும் அன்பான தெய்வம்
அமுதான அவன் நாமம் மறவாமல் செய்வம் ! — திரு||

## சரணம்

அன்றாடம் அதிகாலை எழுகின்ற போதும்
அலுவலைத் தொடங்கிட முனைந்திடும் போதும்
நன்றாக நாவினில் நல்லிசை தோய்ந்திட
நாராயணா என்று பாராயணம் செய்து ! — திரு||

துன்பம் வந்தாலும் துவளாத வகையில்
தொடரும் விதியையும் தூவெனும் நிலையில்
இன்பம் பொழிந்திடும் குமரனின் மாமனை
இறைவா நீவா காவெனத் துதித்து — திரு ||

எத்தனையோ அடியார் வென்றதைக்கண்டு
இதயத்தில் அவர்களின் பாதையைக் கொண்டு
முத்தான திருச்சந்த விருத்தம் பயின்று
முன்னவனே ! அன்பின் மூலவனே என்று — திரு||

# திருவருள்கோடி !

### பல்லவி

திருப்பதி என்றுலே திருவருள்கோடி
திகழ்ந்திடும் திருத்தலமே!— இப்பாரில் ! — திரு ll

### அநுபல்லவி

இருப்பதிலே நமக்கு அரும்பெரும் துணையாய்
திருவேங்கடவன் குடிகொண்டதாலே ! — திரு ll

### சரணம்

வாழ்வார் தமக்கு உயிரினைப்போலே
தாழ்வார் தமக்கு தனித்துணைபோலே
ஆழ்வார் நாவுக்கு அருளிசைப்போலே
அகிலத்தைக் காக்கும் மாலவன் மேவும் — திரு!!

வானவர் போற்றிடும் திருமலை வாணன்
வழுத்திடும் அடியவர் உளமுறை தூயன்
தானவர் ஆயினும் துணையாய் வந்திடும்
தேனெனும் கேசவன் திருவடி தவழ்ந்திடும்!— திருll

திருமகள் கொஞ்சிடும் கருமேகநாதன் !
தென்னவர் இசைக்கொரு திகட்டாகீதன்
மருமகன் முருகனை அடைந்த நல்மாமன்
மாசறு மாதவன் காட்சி வழங்கிடும் — திருll

# திருவேங்கடம் உண்டு !

### பல்லவி

திருவேங்கடம் உண்டு தென்னாட்டிலே ! — அங்கு
திருமாலவன் நின்றான் மலைமீதிலே !— திரு||

### அநுபல்லவி

திருவோங்கும் அவனாலே நம்வீட்டிலே — மனம்
தெளிவாகும் தேனாகும் அவன் பாட்டிலே ! — திரு||

### சரணம்

எந்நாடும் அடையாத உயர்வல்லவா ? — இது
எளியோர்க்கு எப்போதும் சுகமல்லவா ?
எந்நாளும் திருநாளே அங்கல்லவா ? — அதை
இருகண்ணும் கண்டாலே தவமல்லவா?— திரு||

வேதங்கள் கொண்டாடும் தலமல்லவா ?—அது
உள்ளன்பு கொண்டோர்க்கு நலமல்லவா ?
போதங்கள் நின்றாடும் மலையல்லவா ? —அது
பொன்றாத பக்திக்கு நிலையல்லவா?— திரு||

கேட்காத நெஞ்சுக்கும் இசைவாகவே !—வரம்
தெளிக்கின்ற அருளுக்கு வடிவாகவே
வேட்பாளன் விண்ணாளன் கோவிந்தனே— மலர்
விழியோடு பார்க்கின்ற பெருஞாலமே !— திரு||

# திருப்பதி வாழ்வோன்!

## பல்லவி

திருவாய் மொழியில் திகழ்ந்திடும் தலைவன்
திருப்பதி வாழ்பவனே !

## அநுபல்லவி

உருவாய் நின்று உதவிடும் கருணையில்
உலகம் போற்றிடும் உத்தமனே !—நம் !— திரு||

## சரணம்

முருகனில் வாழ்ந்திடும் அழகினைப்போலே
முத்தமிழில் வாழும் இனிமையைப்போலே
உருகிடும் நெஞ்சினில் அன்பினைப்போலே
உத்தமி இலக்குமி கொஞ்சும் மணாளன் !— திரு||

அடியார் நெஞ்சினில் ஆலயம் கொண்டு
அன்னவர் பாடலில் ஆர்வமும் கொண்டு
படியார் தம்மையும் பண்புடன் வாழ்த்தி
பூமியைக் காத்திடும் பூவுடை நாதன் !— திரு||

கதறிடும் யானைக்கு முக்தியைக் கொடுத்து
காளிங்கன தலையில் காலினைத் தொடுத்து
பதறிடும் யாரையும் பொறுப்புடன் அணைத்து
பார்வையில் பனிமழை பொழிந்திடும் இறைவன்! —
திரு||

# பொய்யாமோ ?

### பல்லவி

ஏழை எளியவர்க்கு வாழ்வில்லையோ?—நாட்டில்
ஏய்த்து மிதிப்பவர்க்கு முடிவில்லையோ?

ஊழையும் வென்றிடும் சக்கரமேந்தி
உலகினைக் காத்திடும் உலகளந்தோனே !— ஏழை ||

### சரணம்

சாதியின் திமிராலே வன்முறைகள்—இங்கு
சந்ததம் நடப்பதும் அறியாயோ?
நீதியின் நிழல்தேடி அன்னவர்கள்—உன்னை
நம்பி அழைப்பதும் கேளாயோ?— ஏழை ||

பணமும் பதவிகளால் படுகொலைகள்—பெரும்
பேதைகளின் மீதா ரணகளங்கள்?
தினமும் அன்னவர்க்கா இந்நிலைகள்?—இவை
நீ அறிந்தும் ஏனோ இக்குறைகள்?— ஏழை||

தருமம் அழிகையிலே தோன்றிடுவேன்—என்று
சொன்ன உன்கீதையும் பொய்யாமோ?
கருவம் கொண்டிடும் அரக்கரினம்—இன்னும்
கோலை எடுப்பதே மெய்யாமோ?— ஏழை!!

# சுகமேது?

### பல்லவி

பாடாமல் நீ இருந்தால் சுகமேது?—அவனைப்
பாடாமல் நீ இருந்தால் சுகமேது?

### அநுபல்லவி

ஆடாமல் நீ இருந்து அசையாமல் உண்டாலும்
அருளானந்தம் கிடைக்கத்திருமாலையே பணிந்து— பா॥

### சரணம்

வேண்டிய செல்வங்கள் உனதான போதும்
உல்லாசமே உனக்கு வணங்கிடும் போதும்
தூண்டிடும் வினைகளைத் தொடர வொண்ணுமல்
திருப்பதி மலையானைத் துணையாகக் கொண்டு— பா॥

நில்லாத மேனியின் நிலையாமை தெரிந்தும்
நித்தமும் அதற்காக பலவும் புரிந்தும்
பொல்லாத பாவங்கள் சுமந்து நிற்காமல்
பூதரனின் தாளை சிரமீது கொண்டு — பா॥

பேசிடக் கனியான பதங்கள் இருந்தும்
பிதற்றலின் காய்களை தினமும் விரும்பி
வீசிடும் காற்ருக ஊரைச்சுற்ருமல்
வேலவன் மாமனை உளமார நினைத்து— பா॥

# சென்று தொழு !

### பல்லவி

திருமலை சென்று தொழுவாய் !—அன்பின்
திருமலை சென்று தொழுவாய்!—அங்கு
திருமாலின் பதம்பாடுவாய் ! மனமே !!— திரு ||

### அநுபல்லவி

அருமலை என்று ஒன்று
அவனியில் அதுவே என்று
பெருமறை சொல்லக் கண்டு
பேரின்பம் கொள்ள இன்றே ! — திரு||

### சரணம்

கற்ற கலைகளெல்லாம்
கவலையைத் தீர்ப்பதில்லை !
உற்ற உறவு தன்னால்
உவகை கிடைப்பதில்லை !
பெற்ற பொருள் வகையால்
பேரின்பம் வருவதில்லை !
மற்ற சுகங்கள் பெற்றும்
மகிமையே யில்லை என்று !!— திரு ||



# விரும்பியதேன்?

## பல்லவி

எத்தனையோ மலைகள் இத்தரையில் இருக்க
இத்திருமலையை நீ விரும்பிய தேன்?

## அநுபல்லவி

தத்துவமே! எங்கள் உத்தமனே !— தெய்வத்
திருமகளை மணந்த நித்தியனே !—நிமலா !— எத்॥

## சரணம்

தமிழினை விரும்பிடும் முருகனைப்போலே
தவத்தினை விரும்பிடும் முனிவரைப் போலே
அமிழ்தினை விரும்பிடும் அமரரைப்போலே
அழகிய சங்கினை ஏந்தியமாலே !— எத்॥

புண்ணியம் செய்தது இம்மலை என்று ?
பக்தியின் தாயகம் தென்னக மென்று?
கண்ணியம் மிகுந்தது இத்தல மென்று ?
காசினியே வியக்கும் அருப்பெருமானே !— எத்॥

ஏழுமலை அணியின் அழகினைக்கண்டா ?
இசைத்திடும் கீதத்தின் பொருளது என்று ?
வாழுமலை நமக்கு ஏற்றது கண்டா?
உள்ளன் புடனே கோயிலைக்கொண்டாய் ! எத்॥

# போதுமா ?

## பல்லவி

படித்திருந்தால் போதுமா?— என்றும்
பெருமாளின் புகழ்பாடவேண்டாமா? — மனமே!— படி||

## அநுபல்லவி

நடிப்பினில் தேர்ந்தாலும் நற்பொருள் சேர்ந்தாலும்
நற்றுணை ஒருதெய்வம் வேண்டாமா?—மனமே !— படி||

## சரணம்

மனிதப்பிறவி என்ருல் வாழ்க்கையிலே உண்டு
மகிழ்ந்து இருப்பதொன்றே ஆகிடுமா ?
புனிதப்பிறவி எய்தி புண்ணியத்திலே மிதந்து
பூதரன் பெயர் ஓதவேண்டாமா?— மனமே !— படி||

முன்னவர் யாவரும் மோனத்தவம் புரிந்து
முக்திநெறி மொழிதல் தெரியாதா ?
அன்னவர் வழியில் வந்தவன் நீயும்
அறிவொளி பெற்றுய்ய லாகாதா?—மனமே !— படி||

பகுத்தறிவு என்று பிதற்றிய மூடரும்
போனஇடம் எதுவோ சொன்ஞரா?
வகுத்தவன் அன்று இயற்றிய ஆணையை
ஒதுக்கிவிட்டே எவரும் நின்ருரா?— மனமே!— படி||

# நிறைந்தவனே !

## பல்லவி

சென்ற தெங்கோ அறியேன் !—எங்கள்
சிந்தை நிறைந்தவனே! நெடியவனேநீ — செ ll

## அநுபல்லவி

நின்றநிலையில் நான் திருப்பதியை நோக்கி
நடந்து நடந்துமே காணவந்தேனே !— செll

## சரணம்

காஞ்சியில் சிலநாள் தங்கச் சென்ருயோ ?
கவினுறு ஸ்ரீ பெரும்பு தூரினை அடைந்தாயோ?
வாஞ்சைமிகும் அழகின் ஆண்டாளைக்காண
ஸ்ரீ வில்லிபுத்தூரில் திளைக்கச் சென்ருயோ?— செll

காவிரியில் குளித்து களிக்கச் சென்ருயோ?
ஸ்ரீரங்கம் சென்று துயில நின்ருயோ?
பூவிரியும் சோலை குடந்தையிலே தங்கி
பொழுதினைப் போக்கிட நினைத்துவிட்டாயோ?— செll

திருவல்லிக்கேணியில் தங்கச் சென்ருயோ ?
சோளிங்கபுரந்தனில் சுகமுறநின்ருயோ?
திருமிகும் தேவியைத் துணையாய்க் கொண்டு
திருப்பாற் கடலில் பள்ளிகொண்டாயோ?— செll

# திருமலே இருப்போனே !

ஓடும் மேகத்திலே—உந்தன்
உருவத்தைக்காணுகின்றேன் !
ஆடும் அலேகளிலே—உந்தன்
அழகினைக்காணுகின்றேன் !
தேடும் தேவர்களே—திகைத்திட
திருமலே இருப்போனே !-- ஓடும்||

பாடும் பாட்டினிலே—உந்தன்
பண்பினைக்காணுகின்றேன் !
கூடும் நாதத்திலே—உந்தன்
குளுமையைக்காணுகின்றேன் !
தேடும் வேதங்களே—திணறிட
திருப்பதிவாழ்வோனே !— ஓடும்||

வீசும் தென்றலிலே—உந்தன்
உள்ளத்தைக்காணுகின்றேன் !
பேசும் மொழிகளிலே—உந்தன்
பெருமையை அறிகின்றேன் !
கூசும் மலர்களிலே—இலக்குமி
கொஞ்சிட மகிழ்வோனே !— ஓடும்||



# தேவாதி தேவன்

## பல்லவி

கொட்டித்தருவதற்கு கோவிந்தனை போல்
குவலயத்தில் தெய்வம் வேறுண்டோ?

## அநுபல்லவி

கட்டித்தழுவும் அருள்மாலை மணந்திட
கலியுகத்தை நடத்தும் தேவாதி தேவன் !— கொ॥

## சரணம்

அன்பு என்பதே இல்லை என்றாலும்
அறிவின் ஒளியே சூன்ய மென்றாலும்
பண்பு குறைந்திடும் பழக்கம் கொண்டாலும்
பரந்தாமா ! என்று ஒருமுறை அழைத்தாலே—கொ॥

திருச்சந்த விருத்தமே ஓதிடவேண்டாம் !
திருஉடலை வருத்தும் விரதமும் வேண்டாம் !
தெருச்சந்தியில் புரளும் கோலமும் வேண்டாம்
திருநாதா! என்று இருகரம் குவித்தாலே !— கொ ॥

முருகனுக்கு ஏற்ற அருள்மிகு மாமன்
மூளும் துயரினை மிதித்திடும் நாதன்
உருகிடும் நிலைக்கே என்று இல்லாமல்
வாயள வாயினும் வைகுந்தா என்றால்— கொ॥

# பிரபந்த நாயகன் !

நாலாயிரம் என்னும் திவ்விய பிரபந்தம்
நாராயணா ! உந்தன் புகழ் பாடும்!— எந்த
நூலாயிரம் கோடி மற்றவை யாயினும்
நிம்மதி நான்பெற ஈடாகும் ?— நா||

''பா'' சுரக்கும் அருட் பாசுரங்கள் சொல்லும்
பரந்தாமா ! உந்தன் திருநாமம் !— இந்த
பாசமிகும் பேதை ஒருவனின் நாவுக்கு
பாலமுதம் அதுவேதரலாகும் !— நா||

வில்லிபுத்தூருறை ஆழ்வார் புனைந்தது
வனமாலி ! உந்தன் வடிவாகும் !—அது
நல்லவர் யாவரும் போற்றிப் பணிந்திட
நானிலத்தில் ஏது வேறாகும் ?-- நா||

திருவருள் வழிந்திடும் திருமலை என்றாலே
திருமாலே! அதுவே உனதாகும்! – எந்த
பெருவருள் ஆயினும் அதிலே இருப்பதை
பாரினில் யாரே தளலாகும்?— நா||

கவிஞரில் மாமன்னன் கம்பர் புனைந்தது
கேசவனே! உந்தன் கலையாகும் !— இந்த
புவியினில் அதுபோல் வேறொரு காவியம்
புனைந்தாலும் ஏது நிலையாகும்? — நா||

# ராகமாலிகை ஏனோ?

## பல்லவி

ராகவன் திருநாமம் தெவிட்டாமல் ஒலிக்கையில்
ராகமாலிகை ஏனோ?—அனுராக மாலிகை ஏனோ?— ரா॥

## அநுபல்லவி

மோகம் உலாவிடும் இசைமுழங்கும் அரங்கில்
மோகன கீதங்கள் சுவை வழங்கும் விருந்தில்— ரா॥

## சரணம்

எத்தனையோ பாட்டில் இறுமாந்ததுண்டு
என்னையே அதற்காகக் கொடுத்ததும் உண்டு
அத்தனையும் இங்கே சுவைகூட்டுமா?
அலங்காரன் பெயருக்கு இணைகாட்டுமா?— ரா॥

யாழொடு முழவும் தாளமும் குழலும்
தமிழெனும் அமுதின் பல்லவி குழையும்
ஏழிசையாய் வந்து எழில் காட்டினும்
ஏழுமலையான் பெயரின் சுகம் காட்டுமா?— ரா॥

வீணையின் ஒலியும் நாதஸ்வரம் தானும்
வனக்குயில் தோற்றிடும் வனிதையின் குரலும்
தூணையும் குலுக்கிடும் சுகமே காட்டினும்
திருவாழ் மார்பனின் பெயர் போலாமோ?— ரா॥

# துதி செய்யவேண்டும் !

## பல்லவி

துதிசெய்யவேண்டும் மனமே !— என்றும்
துதிசெய்யவேண்டும் மனமே !!

## கண்ணிகள்

சதி மிகும் உலகினில் சமரசம் பெருகிட
கதிதனை யருளிடும் கார்முகில் நாதனை!— துதி||

திருமகள் துணையினில் வறுமையைப் போக்கிட
பெருமனம் காட்டிடும் தாமரைக்கண்ணனை !— துதி||

செந்தமிழ்ப்பாவலன் பின்னால் சென்றிடும்
சிந்தை நிறைந்திடும் சிவசக்தி அண்ணனை !— துதி||

முதலையின் வாயினில் சிக்கிய யானைக்கு
உதவிய தேவனை வைகுந்தவாசனை !— துதி||

பிறப்பினைப் பார்த்திட பிரம்மனை அருளிய
சிறப்பினை உடையானை சேயோனின் மாமனை !— துதி||

மார்கழித் திங்களில் மனமது மகிழ்ந்திட
யார்வழி யாயினும் சீர்தரும்மாலனை !— துதி||

பாசுர மாமழையில் குளித்திடும் பேர்களின்
மாசினை நீக்கிடும் திருமலை அமர்ந்தானை !— நுதி||

# திருமலையே !

### பல்லவி

மலைகளில் சிறந்தது திருமலையே !—அது
மனக்கவலைப் போக்கும் பெருமலையே !!

### அநுபல்லவி

கலைகளில் சிறந்தது இசைக்கலையே !—அது
கேசவன் புகழென்றால் காத்திடும் கலையே !— மலை||

### சரணம்

பூக்களில் சிறந்தது தாமரைபோல்—இந்த
பூமியில் சிறந்தது பாரதம்போல்
பாக்களில் தாலாட்டு சிறந்ததுபோல்—பந்த
பாசத்தில் தாயுள்ளம் சிறந்ததுபோலே!— மலை||

வேதத்தில் சிறந்தது கீதையைப்போல்—இங்கு
வாழ்வுக்கு சிறந்தது குறளினைப்போல்
நாதத்தில் யாழது சிறந்ததுபோல்—சங்கின்
நேர்த்தியில் வலம்புரி சிறந்ததுபோலே !— மலை||

வணங்கிடும் அடியார்கள் மகிழ்ந்திடவே—நல்ல
வரங்களை வாரிவாரிப்பொழிந்திடவே
குணங்கொண்ட நாயகனும் திருமாலே—அங்கு
கொஞ்சும் கமலையோடு அமர்ந்ததனாலே !— மலை||

# வெங்கடரமணா !

வெல்லு வெல்லு என்று வாழ்த்து வெங்கடரமணா!—இங்கு
வேதனைக்கோர் முடிவுகாட்டு சுந்தர சுகுணா !
சொல்லு சொல்லு என்றுகேட்கும்ஏழைக்குரலிலே-உந்தன்
சிந்தை யெல்லாம் இரங்கவேண்டும் இந்தப்புவியிலே-வெல்

செல்வமுண்டு செழுமையுண்டு இந்தநாட்டிலே—அதை
சிலரின் உரிமை ஆக்குவதோ சொந்தநாட்டிலே !
வெல்வமென்று முயலும் கூட்டம் உந்தன் அடியிலே-வந்து
வணங்கி எழுந்து சென்றபின்பும் தோற்றுமுடிவதோ?—
வெல்ll

வேர்வைசிந்தி உழைப்பவர்க்கு வயிறு காய்வதோ? இங்கு
வீணருக்கு மட்டுமென்ன வசதி சேர்வதோ?
போர்வையில்லா குடிசைகட்கு தினமும்
தொல்லையோ?—சிலர்
போடுகின்ற வேடத்தின் முன் நியாயமில்லையோ?-வெல்ll

பிறப்பிலிங்கு சாதிபேதம் உனக்கு நல்லதா?—அதைப்
பேணிக்காக்கும் பாவிகட்கும் நீயும் அருள்வதா?
இறப்பு என்ற ஒன்றை வைத்தும் இன்னும் மயக்கமா?—
அதை
எத்தர்களின் மீது எறிய உனக்கும் தயக்கமா?-வெல்ll

கவிதை என்ற வாளைவைத்து உன்னை வணங்கினேன்!—
இங்கு
களத்தை நோக்கிச்சென்றிடவே துணையைவேண்டினேன்
கவிதையாலே நாட்டைக்காக்க சபதம் பேசினேன்!-அதை
கண்ணெதிரே முடித்திடவே அருளைவேண்டினேன்!-வெல்ll

# மாபெரும் தலைவா!

### பல்லவி

சர்வமும் உன்னில் அடங்கும்!—தேவா
சர்வமும் உன்னில் அடங்கும்!—இங்கு
செயல்க ளெல்லாம் உந்தன் செய்கையில் இயங்கும்!-சர்॥

### அநுபல்லவி

கர்வமிகுந்தோரை அழித்த கம்பீரா! — பார்த்தன்
கண்கள் பார்த்த சிங்காரா!— சர்॥

### சரணம்

மாகடலும் மலையும் கானகமும் வெளியும்
மண்டிடும் கதிரொடு காற்றும் ஒளியும்
மாமதியும் நதியும் உயிரினங்கள் யாவும்
மேனியிலே காட்டி அருளிய ஸ்ரீ மார்பா!— சர்॥

உறவினை வீழ்த்திடும் செங்கள மாயினும்
உண்மையின் பொருளை கீதையாய் உரைத்து
மறவினை ஈதென மயக்கத்தைத் தெளித்து
மகிமையை போதித்த மாபெரும் தலைவா!— சர்॥

அன்பும் அறமும் நிலைத்திட புவியில்
அரக்கரின் கொடுமை வீழ்ந்திட வலியில்
என்பும் உருகிட கருணையும் நீகொண்டு
எத்தனையோ செயல்கள் இயற்றிடும் ஸ்ரீ நாதா!-சர்॥

# வடிவழகா !

### பல்லவி

வாராய் ! வாராய் ! வடிவழகா—நல்ல
வரம் பல தருவாய் தமிழழகா !—நீ— வா||

### அநுபல்லவி

பாராய் எனையே பாசத்திலே—ஒரு
பாவி என்றாலும் நேசத்திலே—நீ— வா||

### சரணம்

ஏழையின் நெஞ்சம் மகிழ்ந்திடவே—அதில்
எல்லாம் நீயாய் திகழ்ந்திடவே
பேழையில் செல்வம் வேண்டாமல்—உந்தன்
பதமலர் ஒன்றே வேண்டிடுவேனே நீ— வா||

வேலுடன் மயிலும் குலுங்கிடவே—பக்தி
வயலினில் அடியார் விளங்கிடவே
நாலும் தெரிந்தார் நாவினிலே—உந்தன்
நினைவே இசையாய் பாய்ந்திடவே நீ!— வா||

பைரவிக் கால்கள் நடமிடவே !—அந்த
பரமனின் மனமும் அடியிடவே
வைரத்தின் ஒளியாய் மாநிலமே—உந்தன்
வரையா அருளால் நிறைந்திடவே நீ!— வா||

# தெய்வத்தின் தெய்வம்

## பல்லவி

தெய்வத்தின் தெய்வமென்னும் திருமுருகா !—கயிலை
தெய்வத்தின் தெய்வமென்னும் திருமுருகா!!

## அநுபல்லவி

மெய்வழி மாத்தமிழும் மனமடியார்களும்
மெய்யுருக வணங்கும் மாலவன் மாமருகா !— தெய்॥

## சரணம்

படைத்தவனைப்பிடித்து சிறையினிலே அடைத்து
படைப்பினையே பார்த்த வல்லவனே!—அன்று
படைத்தலைமை ஏற்று தளபதியாய் நின்று
வானவரைக் காத்த நல்லவனே!—பெரும்— தெய்॥

நம்பிய அடியாரை ஆதரித்தணைத்திட
நாயகனாய் நின்ற சண்முகனே !—கொடும்
வம்பரையும் பார்த்து வாழ்த்திடவே எழும்
வள்ளியின் மணவாளன் சரவணனே!—அரும்!-தெய்॥

இசையிலும் எழிலிலும் கலையிலும் கனிவிலும்
இணையே யில்லாத இறையவனே!—தமிழ்
வசையிலும் மயங்கி வரங்களை ஈந்திடும்
உளமே நிறைந்திடும் மறையவனே-எங்கள்!- தெய்॥

ா!

## பல்லவி

எப்படிச்சொல்வ தென்றே புரியவில்லை!—தமிழ்ச்
சொற்களைத் தேடுகிறேன் கிடைக்கவில்லை! – முருகா!-எப்||

அப்ப! நின்திருத்தணியில் ஆடிகார்த்திகையில்
அன்பர்கள் செலுத்திடும் காவடிக்கோலத்தை! — எப்||

## சரணம்

மலையெல்லாம் தலைகள் மொய்த்தனவோ?—மக்கள்
மாகடலே மலையைச் சூழ்ந்ததுவோ?
கலையெல்லாம் இசையாய் பாய்ந்திடவே—அதில்
காவடிக் கூட்டங்கள் மிதந்தனவோ?—இதை!— எப்||

தென்றலெல்லாம் மலரில் திளைத்ததுவோ?— நல்ல
தேன்மணத்தை வாரி இறைத்ததுவோ?
மன்றமெல்லாம் மணிகள் ஒலித்திடவே!—அதில்
மானச தீபங்கள் ஒளிர்ந்தனவோ?—இதை!— எப்||

பம்பையும் சலங்கையும் முழங்கிடவே—பக்தி
பரவசத்தில் மக்கள் குலுங்கிடவே
உம்பரெல்லாம் அதிலே மயங்கிடவே – உந்தன்
உவமையிலா அருள் கமழ்ந்ததுவோ?—இதை!—எப்||

# மாலை எதற்கு?

## பல்லவி

மாலை உனக்கெதற்கு?—சந்தப்பா
மாலை இருக்கையிலே--இந்தப்பூ
மாலை உனக்கெதற்கு?

## அநுபல்லவி

காலமெல்லாமும் காற்றெனவே நின்று
கலியுகமெல்லாம் இயக்கிடும் முருகா!— மாலை||

## சரணம்

அன்பர்கள் நெஞ்சை ஆலயம் கொண்டு
அகிலமெல்லாமும் நிறைந்தவனே!
அன்பு இல்லாரையும் அரவணைத்துக்காக்கும்
அருளர சாட்சியின் காவலனே!— மாலை||

ஈசனின் மடியில் ஆசனம் கொண்டு
பிரணவத்தின் பொருளை உரைத்தவனே!
ஏசிடும் பேரையும் அன்புடன் ஏற்று
எல்லா நலமும் இறைப்பவனே!— மாலை||

தேவர்கள் சேனைக்கு பொறுப்பினை ஏற்று
தானவர் குலத்தை அழித்தவனே!
மூவரும் யாவரும் போற்றிப் பணிந்திட
முத்தமிழ் நாட்டினில் செழித்தவனே!— மாலை||

படைப்பதும் வளர்ப்பதும் அழிப்பதும் என்று
பொறுப்பினையும் பார்த்த வல்லவனே!
கிடைப்பதும் சுகிப்பதும் செய்வினை யாயினும்
கந்தா! என்பவர்க்கு கிடைப்பவனே!— மாலை||

# கொஞ்சு தய்யா !

## பல்லவி

ஒருகோடி குறிஞ்சிமலர் கொஞ்சுதய்யா—உன்னை
ஓயாதக் கடலலைகள் கெஞ்சுதய்யா!

## அநுபல்லவி

ஒருகோடி நாவாலே சொன்னாலும் முடியாத
ஓங்கார வடிவான வேலோனே! விளைவோனே!— ஒரு||

## சரணம்

ஒப்பிலா மாமுதல்வன் நீயே என்று!—உயர்
உண்மையின் விளக்கமும் உனதே என்று
தப்பிலா தண்தமிழின் சுவையே என்று
தாகமும் மோகமும் பின்னிப் பிணைந்து— ஒரு||

திருப்புகழ்த் தேரோட்டம் நீயே என்று—தெய்வத்
திருத்தணித் திருக்கோலம் உனதே என்று
குருப்புகழ் மேவிடும் பெரும்புகழ் கொண்டு
குன்றுகள் தோறும் நின்றவனே என்று!— ஒரு||

அருள்மாரி பொழிந்திட அகிலமெல்லாம்!—நல்ல
அடியார்கள் மகிழ்ந்திட காலமெல்லாம்
மருள் மாயை சூழாமல் மண்ணைசை பெருகாமல்
மங்கலச்சங்கமம் எங்கும் தவழ்த்தி ஒரு||

# மலை ஏறிவந்து ..............

## பல்லவி

மலைஏறிவந்து மன்றாடுவேன்!—உன்
மடிமீது நலம் காண நின்றாடுவேன்!—முருகா— மலை||

## அநுபல்லவி

தலைபோக நேர்ந்தாலும் துதிபாடுவேன்—உன்
தாள் சேரும் சுகத்தாலே மதிநாடுவேன்!— மலை||

## சரணம்

எனைவாட்ட துன்பங்கள் படை சேரவே
இல்லாமை என்மீது நடைபோடவே
தினைபோன்ற தெல்லாமும் பனைபோலவே
திரளாகத் தொடர்ந்தாலும் உனைத்தேடியே!— மலை||

இளநெஞ்சம் இதற்கென்று துணையாரப்பா?
எல்லாமும் சுமையாகும் நிலை ஏனப்பா?
வளமென்ன வாய்த்தது நீ சொல்லப்பா?
வழிகேட்டு உனை நாட இதுவும் தப்பா?— மலை||

கொடுப்பதும் பறிப்பதும் நீயல்லவா?
கேள்வியும் பதிலும் உனதல்லவா?
எடுப்பதும் அணைப்பதும் நீயல்லவா?
எப்போதுப் நான் வேண்டும் வடிவேலவா!— மலை||

# தணிகையின் வாசா !

### பல்லவி

ஓயுமுன்னே வருவாய் !—முருகா
ஓயுமுன்னே வருவாய் !—என்னுயிர்
ஓயுமுன்னே வருவாய் !

### அநுபல்லவி

தேயுமுன்னே உடல் சாயு முன்னே நீ
தரிசனம் தந்தென்னைத் தழுவி அணைப்பாய்!— ஓயு॥

### சரணம்

அருகா உன்னருள் ஆட்சியைக் கேட்டு
ஆழ் மனதாலே துதிப்பதைப் பார்த்து
உருகா மனிதரும் உணர்ந்து சொன்னாலும்
உள்ளத்தில் பதியாத ஒருவனையும் காக்க!— ஓயு॥

தருமம் ஒன்றே வாழ்வெனக்கொண்டு
தரணியில் வாழ்ந்திடும் சிலரையும் கண்டு
கருமம் ஒன்றே சுகமெனத் திரிந்து
காசுக்கு உழைப்பவன் இவனே என்றாலும் !— ஓயு॥

கோடிகோடி மக்கள் இதய நிவாசா !
கூப்பிடும் அடியரைக் காத்திடும் நேசா !
நாடிடும் வரத்திற்கு தணிகையின் வாசா !
நற்றமிழ்ப் போற்றிடும் நலமிரும் ராசா! — ஓயு॥

# ஏனே விடுத்தாய் !

### பல்லவி

ஆசைகள் விடவில்லையே !—முருகா !
ஆசைகள் விடவில்லையே—என்னை!— ஆசை||

### அநுபல்லவி

பாச உலகமிதில் பொருள் நிலையாலே
பாழும் உடலொடு உறவுள்ளதாலே !— ஆசை||

### சரணம்

ஞானத்தின் நூல்பல கற்றறிந்தாலும்
நிலையாமை தன்னை உணர்ந்து கொண்டாலும்
மோனத் தவத்தினில் மனமே நிலைத்திட
முடியா தெனவே முழக்கங்கள் செய்திடும்!— ஆசை||

சரித்திரம் பலவற்றைப் படித்திருந்தாலும்
சத்தியமே வெல்லும் என்று கண்டாலும்
தரித்திர வாழ்க்கையைத் தாங்க ஒண்ணமல்
தனத்திலும் புரட்டிலும்நிதமும் அலைந்திடும்!-ஆசை||

பேய்கள் ஐந்தினை உடலொடு இணைத்தாய் !
பசியெனும் அரக்கனை வயிற்றினில் அடைத்தாய்!!
நாய்கள் என்றிடும் எண்ணங்கள் கொடுத்தாய் !
நம்பிய அடியேனை ஏனோ விடுத்தாய் !!— ஆசை||

# கவிதைத் தவம்

### பல்லவி

நானும் தவம் செய்கிறேன்!—இங்கு
நானும் தவம் செய்கிறேன் !—எந்த
நாளும் முருகனின் பாதங்களை எண்ணி ! - நா||

### அநுபல்லவி

தேனோடு பாலும் படைக்க இல்லாமல்
தேனிலும் இனிதாகும் தமிழினையே வைத்து!— நா||

### சரணம்

இல்லறம் விடுத்து காடு செல்லாமல்
இதயம் விரும்பிடும் உறவைத்தள்ளாமல்
நல்லறம் யாவையும் நம்பிப் பயின்று
நல்லார் பணிகளை வளரப் பணிந்து!— நா||

மலர்வகை அணிமணி செய்ய இல்லாமல்
நறுமணப் பூசனை முழுக்குமில்லாமல்
பலரும் போற்றிடும் பாட்டர்ச்சனை கொண்டு
பாடும் பணியே பேதைக்கென்று நினைத்து!— நா||

தவத்தினில் பலவகைத் தெரிந்திருந்தாலும்
தேவைக்கு யாரும் எது புரிந்தாலும்
தவத்தினில் சிறந்தது கவிதைத்தவமென
தேவா ! குமரா !! ஏழையைப் பாரென!— நா||

# சின்மயப் பொருளே !

செங்கல்வராய மலைமீதில் வாழ்மணியே !—இந்த
சேயனின் குரல் கேட்டு அருளாயோ ? — உந்தன்
செங்கமல அடியெடுத்து என்விழியில் வைத்து
சிந்தையெனும் கோயிலுக்கு வாராயோ ?

குருப்புகழ் மேவிடும் செந்தமிழ் முகிலே—என்
கூக்குரல் கேட்டுவர மாட்டாயோ ?—உந்தன்
திருப்புகழை நானும் அனுதினமும் இசைக்க
தீமையெல்லாம் விரைந்து ஓட்டாயோ ?

வெள்ளிக்கிழமை தோறும் நோன் பிருந்தே—நான்
வணங்கிடும் முறையாவும் தெரியாதோ?—உந்தன்
கள்ளமற்ற அன்பினிலே உயிர் வாழ்பவனின்
கனன்றிடும் துன்பக்கதை புரியாதோ?

புலன்கள் யாவையும் காணிக்கை வைத்தே—நான்
புரிந்திடும் பூசையெல்லாம் அறியாயோ?—உந்தன்
நலம்தரும் நீழலில் வாழ்ந்திடும் ஏழையின்
நெளிந்திடும் கொடுவினைகள் சரியாதோ?

சித்தூர் செழித்திடும் சின்மயப்பொருளே!—இவ்
வேழைக்கு இரங்குமனம் கிடையாதோ ?—உந்தன்
சித்திரப் புகழ் பாடி பயணம் செல்பவன்
சுமந்திடும் துன்பச்சுமை உடையாதோ?

# தமிழிசைவடிவு !

## பல்லவி

தமிழிசை வடிவான திருத்தணி வேலனுக்கு
தமிழினும் மேலான அர்ச்சனை உண்டோ ?

## அநுபல்லவி

அமிழ்தினும் இனிதான ஆன்றோர் மொழியில்
அழகனைப் பாடுதல் பேரின்ப மன்றோ ? —தமி॥

## சரணம்

அன்பினில் துலங்கிய அன்னையிடம்—நல்ல
அன்பையே பொழிந்து வேண்டுதல் போல்
என்னையும் வழங்கிய வள்ளலிடம்—உயிர்
இதயத்தையே வைத்து வேண்டுதல் போலே! —தமி॥

ஒளியைப் பொழிந்திடும் விளக்கினிடம்—முழு
உணர்வையே வைத்து துதிப்பது போல்
களியை வழங்கிடும் கருணையிடம்—பக்திக்
கனிகளை வைத்துப் பணிவது போலே ! —தமி॥

பூவினும் தளிரினும் மெல்லிய தே! — தமிழ்
புவனேஸ்வரன் தந்த மொழியமுதே !
மேவிடில் இன்பம் துள்ளிடுமே ! — அது
முருகனைத் தொழுதிட முதலுரு வாமே ! —தமி॥

# நறுமணம் !

## பல்லவி

நல்ல நல்ல மலர்களின் நறுமணம் ! -- அதை
நுகரும் போது முருகனின் நினைவே தோன்றும் !
— நல்ல||

## அநுபல்லவி

கொல்ல வல்ல குணத்தையே கொண்டவரேனும்
புத்தி தெளிந்தே புலவனைக் காணும் ! — நல்ல||

## சரணம்

சிரிக்கும் சோலையில் நுழைந்திடும் போதும் !
சிந்தும் பூக்களைக் கொஞ்சிடும் போதும்
வரிக்கும் மாலைகள் மருவிடும் போதும்
வாழ்க்கை முழுவதும் பூக்கடை யேனும் ! —நல்ல||

பெண்கள் கூந்தலில் அவை சிரித்தாலும்
பூப்பல்லாக்கே எதிர் திரிந்தாலும்
கண்கள் மயங்கும் வகை என்றாலும்
கந்தன் காதலில் மூழ்கிய பேருக்கு ! —நல்ல||

ஐந்து புலன்கள் ஆவலில் தேடும்
அழகன் மீதே காதல் கொண்டாடும் !
பைந்தமிழின் இசை செவிகளில் பாயும்
பரமனின் அருளே பொங்கிடத் தோயும் ! — நல்ல!!

# வெல்லும் மந்திரம் !

**பல்லவி**

முருகா முருகா என்று சொல்லு ! — உன்
மனதை வாட்டிடும் துயரை வெல்லு ! வெல்லு !
— முரு॥

**அநுபல்லவி**

உருகா தவரும் உணர்ந்த நல்லுண்மை — இதை
உணராமல் அலையாதே மனமே ! — முரு॥

**சரணம்**

சொல்லும் நாவினில் சுவையது ஊறும் !
சொந்தங்கள் யாவும் சுகமாய் சேரும் !
வெல்லும் மந்திரம் இதுவே யாகும் !
வேதங்கள் கூறிடும் ரகசியம் பாரும் ! — முரு॥

வாட்டும் பிணிகள் வழுக்கிட ஓடும் !
வாழ்க்கையின் பாதை நலமாய் கூடும் !
காட்டும் நெறிகள் கவலையைப் போக்கும் !
கவிதையில் துதித்தால் கலக்கத்தை நீக்கும்! — முரு॥

இளமை யிலிருந்தே இசைத்திட லாகும்
இனிமேல் பார்ப்போம் என்றால் ஊனம் !
வளமையில் மூழ்கித்திரியாது பாரும்
வானவர் தேவனின் பாதம் கொண்டாடும் ! — முரு॥

# தீபத் திருநாள் !

கார்த்திகை தீபத்திருநாள் வந்தது !
கந்தனின் பதமலர் பணிந்திடுவோம் !
கார்த்திகைப் பெண்கள் தழுவி வளர்த்த
கார்த்தி கேயன் புகழ் பாடிடுவோம் ! —கார்॥

சோதிவடிவினில் மாமலை தெரிந்தது
சிந்தையின் இருளைப் போக்கிடுவோம் !
சோதனை சூழ்ந்திடும் துன்புறு வாழ்க்கையில்
சிவமது உண்டே கூத்திடுவோம் ! —கார்॥

அண்ணுமலை என விண்ணை யளந்தது
அடியார் போற்றிய புனிதமலை !
எண்ணிய எண்ணங்கள் திண்ணியதாகிட
5யத்தில் அதனைப் பணிந்திடுவோம் ! —கார்॥

அருணு சலனின் அருமைக் குமரனை
அரோகரா என ஒலித்திடுவோம் !
கருணு மயனின் கால்களின் நிழலில்
கவலையைத்துறந்து களித்திடுவோம் ! —கார்॥

மாலவன் மருகன் மாசக்தி புதல்வன்
மாத்தமிழ் நேசனைப் போற்றிடுவோம் !
வேலவன் அவனே ! வெற்றியும் அவனே
வேதநாதன் பெயர் சாற்றிடுவோம் ! —கார்॥

# போற்றடா ! புகழடா ! !

### பல்லவி

போற்றடா புகழடா அறுபடை வீட்டை !
சாற்றடா பாடடா திருப்புகழ்ப் பாட்டை !! —போ॥

### அநுபல்லவி

கூற்றை வெல்லும் ஆற்றல் கொள்ளலாம் !
தூற்றும் நிலையைத் தொலையச் செய்யலாம்!! —போ॥

### சரணம்

எந்த நாட்டில் வாழ்க்கைப் பட்டாலும்
எந்த மதத்தில் நீ இருந்தாலும்
இந்தப் பாட்டின் நினைவு கூறடா !
இன்பக்குமரன் அருளும் வேறடா ! —போ॥

அன்னை தந்தை நல்வினையாலோ
தருமம் நீயும் செய் பயனாலோ
பொன் நிலத்தில் பிறந்ததனாலே
பக்தி மொழியைப் பயின்றதனாலே ! —போ॥

பேசும் தெய்வம் முருகன் பெருமையை
அருணகிரியின் நாதர் சொன்னது !
வீசும் தென்றல் நிறைந்தது போலே
வள்ளிநாதன் கோயில் கொண்டது ! —போ॥

# கங்கைக்குமாரன் !

பல்லவி

தங்கமலை மீதிலே தங்கி விளையாடிடும்
கங்கைக் குமாரனே என்தலைவன் !

அநுபல்லவி

சங்கத்தமிழ்ப் பாட்டிலே செந்தமிழர் வீட்டிலே
பொங்கி யருள் கூட்டிடும் என் இறைவன் ! -- தங்॥

சரணம்

பேரிடத்துப் பிள்ளையாய் பூமிக்கு வந்தவன்
பக்தரின் அன்பினால் பாசத்தில் நின்றவன்
சீரிடத்துப் பெண்ணினால் மாலுக்கு மருகனாய்
தேவாதி தேவரில் ஒளிர்ந்திடும் வேலவன் !— தங்॥

சூரனாகும் அரக்கனைப் போரிட்டு வென்றவன்
சுந்தரி வள்ளியின் இதழினைத் தின்றவன்
கோரிடும் எண்ணங்கள் கூட்டிடும் வண்ணமாய்
கைகொடுத்தாண்டிடும் கண்மணி போன்றவன் !
—-தங்॥
செந்தமிழ் கேட்கவே செந்திலைச் சேர்ந்தவன்
செய்திடும் அருளாலே செவ்வேளாய் ஆர்ந்தவன்
நொந்தவர் யாவரும் வந்தனை செய்யவே
நிறையருள் தூவிடும் கந்தனாய் சிறந்தவன்! —தங்॥

# மணியோசை !

## பல்லவி

ஓம் ஓமென ஒலிக்கிறது !
ஓம் ஓமென ஒலிக்கிறது — அந்த
வேலவன் கோயிலின் மாமணி யோசை ! —ஓம்!!

## அநுபல்லவி

ஆம் ஆமென அபயம் பொழிந்திட
அடியவர் யாவரும் நெஞ்சம் மகிழ்ந்திட !— ஓம்!!

## சரணம்

ஆயிரம் தீபங்கள் ஒளிமழை இடையே
அழகார் மலர்களின் நறுமண நடுவே
பாயிரம் கோடி காற்றில் மிதந்திட
பணிந்திடும் உயர்நிலை பரவச மூட்டிட ! — ஓம்!!

அருளிசைப் பாடல்கள் ஆறென விரைந்திட
அன்புறு நெஞ்சங்கள் சாறெனக் கலந்திட
மருளிசை மூழ்கிய மூடர்கள் ஆயினும்
முருகா ! முருகா ! என்று முழங்கிட ! —ஓம்!!

உலகங்கள் யாவும் ஒன்றினில் அடங்கும் !
ஒன்றெனச் சொல்வது சக்தியில் முடங்கும் !
திலகமெனும் முருகன் அன்னவள் தங்கம்
தெரியாரும் வந்து தொழுதிட எங்கும் ! —ஓம்!!

# கற்பூர ஒளியில் . . . .

## பல்லவி

கற்பூர ஒளியினிலே கருத்துடன் நோக்கினல்
கந்தனின் தரிசனமே கிடைத்திடும் பாக்கியமே !

## அநுபல்லவி

சொற்பூரத் தமிழினிலே சிந்திடும் அமுதினிலே
சுந்தர வேலனின் சிறுநகைப் பூத்திடும் ! —கற்||

## சரணம்

காதல் என்னும் காவியம் கற்ற
கவிதை நெஞ்சம் காண்பது போலே
சாதல் வரினும் லட்சியம் தவரு
தியாக உள்ளம் பார்ப்பது போலே ! —கற்||

வாசம் கொஞ்சும் சந்தனக் குழையும்
வண்ணம் மிஞ்சும் மாலையின் குழைவும்
பாசம் மேவும் அருளினைக் கூட்டி
பக்தி பொங்கிடப் பரவச மூட்டும் ! —கற்||

புனித நீறும் வேதத்தைக் காட்டும்
பூசை செய்தால் வேதனை தீர்க்கும்
மனித குலமே மேன்மையில் வாழும்
மாண்பு யாவும் தணிகையில் சூழும் ! —கற்||

# நினை இனிதே !

முருகா என்று சொன்னால் — உனது
மூளும் துயர் அழியும் !
முருகனின் அடி பணிந்தால் — உனது
முயற்சிகள் கை கூடும் !
உருகும் மலை அவனே ! — மனமே
உணர்ந்தது இது நிசமே !

பணிந்தோர் கெட்ட தில்லை ! — இதைப்
பாரெங்கும் மறுத்த தில்லை !
அணிந்தோர் நெஞ்ச மெல்லாம் — இதை
அறிந்துய்ய வேண்டினவே
பணிந்து நலம் பெறுவாய் — மனமே
பாவங்கள் போக்கிக் கொள்வாய் !

அழகுக்கு மறு பெயரோன் — அவன்
அன்புக்குக் கடலனையோன் !
பழகும் குழந்தை உள்ளம் ! — அது
பாசத்தை உணர்ந்து கொள்ளும் !
கழறும் மறை இதுவே ! — மனமே
கந்தனை நினை இனிதே !



# முத்தமிழ் ஓவியன் !

### பல்லவி

பால் மணக் குழந்தையும் பார்த்து — மனம்
பரவச மாகும் கைகளைக் கோர்த்து ! —பால்||

### அநுபல்லவி

கால் முளைக்காமல் தவழ்ந்து சென்றாலும்
கந்தனின் அழகுக்கு கண்களில் பேசும் ! —பால்||

### சரணம்

எத்தனைப் பேரழகின் வரிசை கண்டாலும்
இளைய அன்னையின் நகை உண்டாலும்
முத்தும் பவழமும் நாணிக் கவிழ்ந்திடும்
முத்தமிழ் ஓவியன் முருகன் முன்னாலே ! — பால்||

பாலும் வெண்மதியும் பார்த்திட்ட போதும்
பாங்குடன் பதுமைகள பேசிட்ட போதும் !
வேலுடன் சேவலும் மயிலும் தோன்றிடும்
வெற்றிக் குமரனின் விழிகள் முன்னாலே ! --பால்||

கருணையும் அன்பும் கண்களில் தேங்கும் !
கனிவும் பாசமும் நெஞ்சினில் ஏங்கும் !
அருணையின் நாதன் அருமை செங்கோலன்
அமரரின் வேதனை தீர்த்திட்ட வேலனை! —பால்||

# ர் விழா !

### பல்லவி

விழிகளில் நடந்தது ஒரு விழா ! — அதன்
உயர்வாலே உயிரும் குளிர்ந்தது, கனிந்தது !
— விழி||

### அநுபல்லவி

பழிகளில்லாத புண்ணியத் தேன்கடலில்
பூவுடலே பாய்ந்து குளித்தது, களித்தது ! — விழி||

### சரணம்

மழையும் காற்றும் வணங்கிடும் பேரிடம்
மதியும் ஞாயிறும் பணிந்திடும் சீரிடம்
கழையும் கன்னலும் குலவிடும் நல்லிடம்
கந்தனின் உறைவிடம் கண்டதனாலே ! —விழி||

தாயெனும் போதே தயவு கிடைத்திடும்
தந்தை என்றாலோ துணையே வந்திடும்
வாயினில் ஒலித்தால் சுவையே ஊறிடும்
வடிவேலன் பதம் பார்த்ததனாலே ! — விழி||

பொங்கல் பெருவிழா நடப்பது போலே
புத்தமி ழாண்டின் பண்டிகை போலே
மங்கலச் செந்தமிழ் காவியச் சங்கமம்
மதுரை மாநகரில் நடப்பது போலே ! — விழி||

# இது போலின்பம் !

### பல்லவி

இன்பம் இதுபோல் வேறுண்டோ ? — புவியில்
இன்பம் இது போல் வேறுண்டோ ? — என்
இறைவன் முருகனின் பாதங்களை வணங்கும் ! —இன்||

### அநுபல்லவி

துன்பம் எதுபோல் தாக்க வந்தாலும்
தூள் தூளாகிப் பூக்களைத் தூவும் ! —இன்||

### சரணம்

கன்னியர்கள் வந்து உறவு தந்தாலும்
காசினியே ஆளும் பதவி வந்தாலும்
பொன்னின் மலைமேல் நின்று கொண்டாலும்
புரிந்தவர் தமக்கே பேரின்பமே தரும் ! —இன்||

மொழிகளின் அமுதம் தமிழே குழையும்
மோகன இசையில் மூழ்கி நின்றாலும்
பழங்களின் ரசத்தில் தேனையும் கலந்து
பருகிடும் பாக்கியம் வாய்க்கு மென்றாலும் ! —இன்||

கண்கள் குளிர்ந்திடும் காட்சி என்றாலும்
கிடைத்திட முடியா உணவு உண்டாலும்
எண்ணிய எண்ணங்கள் நிறைவு கண்டாலும்
எல்லா வயதிலும் இதயம் மகிழ்ந்திடும் ! —இன்||

# எங்கேடி ?

### பல்லவி

எங்கேடி என் அழகன் ? — முகம்
மங்காத நிலவாக ஒளிர்ந்திடும் குமரன் ! —எங்||

### சரணம்

சங்கீத ஒலிகள் சுழன்றிடும் தமிழில்
சல்லாபம் செய்திடும் தேனிசை அமுதில்
சிங்காதனம் கொண்டு அமர்ந்து விட்டானே ?
சிந்தனை சிதறிட மறந்துவிட்டானே ? —எங்||

திருப்புகழ் ஒலித்திடும் சபையினைப் பார்த்து
தொடர்ந்திடக் கால்கள் பாடலைக் கேட்டு
இருப்பெனும் எனையே வெறுத்து விட்டானே ?
இதயத்தில் அதையே நிறைத்துக் கொண்டானே ?
—எங்||

செந்தமிழ் ஓசையில் வைதவர் தமக்கும்
சிவந்திடக் கைகள் கொடுத்திடத் துடிக்கும்
அந்தவர் இடத்தைத் தேடிச் சென்றானே ?
அடியவர் கூட்டத்தில் சிக்கிக் கொண்டானே ?—எங்||

சோலையில் சேர்ந்திட நாளையும் குறித்தான்
சொந்தங்கள் பேசியே இதழினைக் கடித்தான்
காலையும் மாலையும் நமக்கிலை என்றான்
கூந்தலின் பூக்களும் உதிர்ந்திட நின்றான் ! —எங்||

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி

# அம்பிகையே !

## பல்லவி

அம்பிகையே தருவாள் நம்பிக்கையே ! — அன்னை
அம்பிகையே தருவாள் நம்பிக்கையே — அவள்
அருளடிப் பணிந்தார்க்கு ஒரு தாழ்வில்லையே ! —அம்||

## அநுபல்லவி

தும்பிக்கை யானையும் திருக் குகனையும் தந்து
துன்ப மெல்லாம் தீர்க்கும் தாயவள் மாகாளி! —அம்||

## சரணம்

திரு வேற் காட்டினில் கருமாரியாய் வந்து
திகழ் மதுரை தனில் மீனாட்சியாய் நின்று
திருக் காஞ்சிதனில் காமாட்சி என்றிட
திருவருள் பொழிந்திடும் காரணி பூரணி ! —அம்||

திருக்கடவூர் தனில் அபிராமி என்றிட
தில்லையிலே வந்து சிவகாமி யாகிட
திருப்புதுவை தனில் முத்துமாரி என
திகழ்ந்திடவே காக்கும் மாதேவி மகமாயி ! — அம்||

அரக்கர்களை வென்ற புகழினைக் கொண்டாள்
அனைத்தையுமே நடத்தும் ஆதியும் என்பாள் !
மரக்கல மாகடலின் குமரியுமாவாள்
மாதேவன் ஈசனின் சரிபாதி என்பாள் ! —அம்||

# கற்பகத்தாயே !

## பல்லவி

அற்புதங்கள் கொஞ்சும் மயிலையிலே விளங்கும்
கற்பகத் தாம்பிகையே உனைப் பணிந்தேன் !

## அநுபல்லவி

கற்பனை என்றாலும் கற்சிலை என்றாலும்
பொற்பதங்கள் கண்டு பக்தியுடன் நின்று ! —அற்||

## சரணம்

ஓங்கார நாதத்தில் விளங்கிடும் தாயே
ஒரு விரலில் உலகை ஆட்டிடும் மாயே !
ஆங்கார அரக்கர்களை வதைத்தவள் நீயே
அடியவர் குறை தீர்க்க வரமருள் வாயே ! —அற்||

மூவுலகும் காக்கும் முருகனைத் தந்தாய் !
மூலவனின் உடல் பாதியில் நின்றாய்
பாவுலகம் போற்றும் பார்வதி ஆனாய்
பாவிகளும் மகிழப் பார்த்திடும் மீனாய் ! —அற்||

சிந்தனை செய்வது உன்பதம் தானே ?
சொல்வதும் செய்வதும் உன் செபம் தானே !
வந்தனையாய் உடல் வளைந்திட லானேன்
வேலனின் தாயே ! நீசேயனைக் காப்பாய் ! —அற்||

# கருமாரித்தாயே !

## பல்லவி

ஆயிரம் கண் கொண்ட கருமாரியே — அன்பு
பாய்ந்தோடும் பகவதியே தாயே ! —ஆயி||

## அநுபல்லவி

ஆயி மகமாயி என ஆனவளே ! — நம்பும்
அடியவரைக் காக்கும் திரு மாரியே ! —ஆயி||

## சரணம்

மஞ்சளும் குங்குமமும் கொஞ்சிடவே — சர்வ
மகிமை யெல்லாம் படைத்த சங்கரியே !
தஞ்சம் என்பார்கள் வாழ்ந்திடவே — சக்தி
ததும்பிடும் தனியாணை அந்தரியே ! —ஆயி||

திரு வேற்காட்டுக்கு வந்ததனுல் — உந்தன்
தவநிலை தன்னைக் கண்டோமே !
ஒருமுறை அம்மா என்பதனுல் — பெரும்
அமைதியின் இனிமையை உண்டோமே ! —ஆயி||

விலங்குகளே நடுங்கும் சிங்கத்தையே — நல்ல
வாகனமாய் கொண்ட பைரவியே !
கலங்கிடும் போதினில் கலங்காமல் — எங்கள்
கவலைகளைத் தீர்க்கும் நாரணியே ! —ஆயி||

# பூலோக நாயகி !

## பல்லவி

இல்லாத இடம் ஏதம்மா ? — நீ இங்கு
இல்லாத இடம் ஏதம்மா ? —இல்॥

## அநுபல்லவி

பொல்லாத அரக்கரை இல்லாமல் வீழ்த்திய
பூலோக நாயகி பொன்மனத்தேவி ! —இல்॥

## சரணம்

காஞ்சி என்ருலும் காசி என்ருலும்
கவினுறு மதுரைக் காட்சி என்ருலும்
வாஞ்சையுடன் பணியும் கயிலை என்ருலும்
வடிவழகாய் நிற்கும் வாசகி ! அலங்காரி ! —இல்॥

சமயபுரம் எனில் நீ தெரிவாய் !
சிதம்பரம் என்ருலும் நீ இருப்பாய் !!
அமைந்திடும் புதுவைக்கும் பெருமை செய்வாய் !
அன்னை மீனுட்சி அருள் முத்துமாரி ! —இல்॥

திருக்கடவூர் எனில் நான் என்பாய் !
திருவேற் காட்டிலும் நான் என்பாய் !
உருக்க முடன் குகன் அன்னை என்பாய் !
உருத்திரன் துணையே பெருங்கருமாரி ! —இல்॥

# கருணைக்கடலே !

கருணைக்கடலே கருமாரித்தாயே !
கனிந்த பார்வையில் வாழ்வு செழித்திடவா !
தருண மில்லாமல் தினமும் உந்தனின்
திருவடி களையே துதித்து வந்தேனே ! —கரு||

பம்பையும் உடுக்கையும் ஒலித்திடும் இசையில்
பாவன மாகிடும் பகவதிநீயே !
இம்மையில் ஏழையின் வாழ்வு செழித்திட
இனிமையில் யாவும் உதவிடுவாயே ! —கரு||

பனிஎனும் பார்வையில் பாரே இயங்கிட
பகலும் இரவுமாய் நீ அமைத்தாய் !
கனி எனும் தமிழினில் என்றும் நின்றிட
கவிஞர்கள் நாவில் கவிதைகள் சமைத்தாய் ! —கரு||

நாட்டினில் உந்தனின் பெருமை விளங்கிட
திரு வேற் காட்டினில் வந்துதித்தாய் !
வீட்டினில் உந்தனின் நாமம் முழங்கிட
உள்ளமெல்லாம் வந்து நீயே நிறைந்தாய் ! —கரு||

மாதவன் தங்கையாய் மாதவம் செய்துமே
மகேசன் மேனியில் பாதிகொண்டாய் !
மாதிவள் ஆதியாம் அகிலத்தின் சோதியாம்
மாசக்தி என்றுமே ஆட்சி கண்டாய் ! —கரு||

# அகிலாண்டேஸ்வரி !

பல்லவி

அம்மா ! கௌரி அருளம்மா !
அரனின் துணையே கருமாரியம்மா ! —அம்॥

அநுபல்லவி

இம்மாநிலத்தோர் வணங்கிடும் தாயே
இணையே இல்லாத சக்தியும் நீயே ! —அம்॥

சரணம்

வெம்பவ நோயற வேதனை தீர்ந்திட
வாழ்க்கையில் யாவும் வாசலில் சேர்ந்திட
அம்புயப் பாதம் நம்பித் துதித்தோம்
அகிலாண்டேஸ்வரி ஆதரித்தருள்வாய் ! —அம்॥

ஓம் சக்தி ஓமென ஓதிடப் பயின்றோம்
உணர்ந்தவர் யாவரும் ஒன்றாய் நவின்றோம் !
ஓம் சக்தி என்றாலே நீயன்றி யாரோ !
உலகின் கதியே உனையன்றி வேறோ ? —அம்॥

ஞானக் குமரனின் அன்னை என்றாலே
அடியவர் தமக்கே அருந்துணை யன்றோ ?
வானதேவர்கள் வணங்கிடும் மாயே !
வடிவழகே ! திவ்ய பைரவித் தாயே ! ! —அம்॥

# கணபாரமமா !

## பல்லவி

மதுரைக்கு உரியாளே மீனாட்சியே ! — தாயே
மங்கலம் தந்தாளக் கண் பாரம்மா ! ! --மது||

## அநுபல்லவி

அதிரடி ஆணவம் சதிராடும் புவியில்
அணைத்தாள நீயன்றி கதியாரம்மா ? —மது||

## சரணம்

அண்ட சராசரம் எங்கணுமே — உந்தன்
ஆணை யில்லாமல் அசைந்திடுமா ?
பண்ட மெல்லாமும் குவிந்தாலும் — உந்தன்
பார்வை படாமல் இசைந்திடுமா ? —மது||

சக்தி வேலாயுதன் வென்றிடவே — சர்வ
சக்தி யெல்லாம் தந்த சாம்பவியே !
சத்தியம் தழைத்திட இத்தினமே ! — வந்து
சித்தம் கனிந்தருள்வாய் சங்கரியே ! —மது||

அர்த்த நாரியாய் அமைந்தவளே ! — எங்கள்
அம்பிகையே ! சூல சண்டிகையே !
நர்த்தன மாடிவரும் நாயகியே ! — தேவி
நம்பிக்கை நீயன்றி துணை யாரம்மா ! —மது||

# அபிராமியே !

## பல்லவி

ஓங்காரத்தாயே அபிராமியே
உன்னருள் வேண்டுமம்மா எங்களுக்கே ! —ஓங்||

## அநுபல்லவி

ஆங்கார அரக்கரினம்
அடியோடு நாசமுற
நீங்காமல் விளையாடும்
நின் முருகனைப்பாட ! —ஓங்||

## சரணம்

உருக்கம் கொண்டவர் உள்ளம்
உவந்து பதம் நினைக்க
இருக்கும் இடம் தேர்ந்து
இன்ப அருள் நலங்கள்
பெருக்கும் உன் புதல்வனை
பேதை என் நாயகனை
நெருக்க முடன் துதிக்க
திருக்கடவூர் விளங்கும் ! —ஓங்||



# முத்துமாரி !

ஆயிரம் கைகளிலே — அன்பை
அள்ளித்தரும் கருணையிலே
ஆயி உமையானவளே ! -- நம்பும்
அடியாரைக் காத்தருள்வாய் ! —ஆயி!!

தாயினும் உயர்ந்தவளே ! — நல்ல
தங்க முத்து மாரியம்மா !
சேய்களின் துயரறவே — உந்தன்
செங்கைகள் எடுத்தருள்வாய் ! — ஆயி!!

முருகனை ஈன்றவளே ! — இந்த
மண்முழுதும் ஆள்பவளே !
உருகிடும் மாந்தர்களை — உந்தன்
உள்ளம்வைத்து காத்திடுவாய் ! —ஆயி!!

பம்பை ஒலிக்குதம்மா ! — இங்கே
பக்திரசம் பெருகுதம்மா !
அம்பிகை வாருமம்மா ! — மக்கள்
அன்பு நலம் காருமம்மா ! —ஆயி!!

பார்வையில் எரிபவளே ! — உள்ளே
பனி நெஞ்சைக் கொண்டவளே !
வேர்வையில் பிறந்தவளே ! — எங்கும்
வெற்றி கொள்ளும் மாரியம்மா ! —ஆயி!!

# சரணமிதே ஐயப்பா !

பூமியிலே ஒரு பகுதி புண்யபூமி யாகிடவே
பூசைகளைப் புரிந்திடுவோர் பொற்காலம் கண்டிடவே
ஸ்வாமி நீ சபரிமலை மேவிடுவாய் ஐயப்பா ! — அந்த
சபரி நோக்கிக் கிளம்புகிறோம் துணை நீயே ஐயப்பா !
சரணமிதே சரணமிதே ஐயப்பா ! —பூமி||

இதயத்திலே ஒரு கோயில் உனக்காக எழுந்திடவே
இன்பத்தமிழ்ப் பாமாலை உனக்காகக் கமழ்ந்திடவே
உதயத்திலே ஆதவனாய் விளங்கிடுவாய் ஐயப்பா !—அந்த
உண்மை நோக்கிக் கிளம்புகிறோம் துணை நீயே ஐயப்பா !
சரணமிதே சரணமிதே ஐயப்பா ! —பூமி||

நாற்பது நாள் விரதத்திலே கருப்பாடை துலங்கிடவே
நல்லவரும் அல்லவரும் எல்லோரும் கலந்திடவே
ஏற்பது நீ நாயகனாம் மகர ஜோதி ஐயப்பா ! — அந்த
எழிலை நோக்கிக் கிளம்புகிறோம் துணை நீயே ஐயப்பா!
சரணமிதே சரணமிதே ஐயப்பா ! —பூமி||

கல்லாகும் முள்ளாகும் மலை எல்லாம் என்றாலும்
கொடி தான விலங்குகளே உலவிடுமே என்றாலும்
நல்லார்க்குத் துன்பமில்லை என்றிடுவாய் ஐயப்பா—அந்த
நேர்த்தியிலே கிளம்புகிறோம் உன்னிடமே ஐயப்பா!
தொல்லைகளைப் போக்கிவிடு ! துன்பங்களை நீக்கிவிடு
பதினெட்டாம் படி மேவும் ஐயப்பா !
சரணமிதே சரணமிதே மெய்யப்பா ! ! —பூமி||

# துதி பாடுவோம் !

பல்லவி

ஐயப்பன் பாதங்கள் மெய்யாக வணங்கி
அன்பாக எப்போதும் துதி பாடுவோம் !
அற்புதத் தேவனை கதிநாடுவோம் ! ! —ஐய||

அநுபல்லவி

ஐயங்கள் சிறிதேனும் அணுகாமல் ஓடும்
ஆனந்தம் கடலாக அலைமோதிக் கூடும் ! —ஐய||

சரணம்

அன்றாடம் அதிகாலை விழிக்கின்ற போதும்
ஆரம்ப வினை என்று எதுவான போதும்
நன்றாகும் பாடலில் குரலோசைக் கலந்திட
நம்பினேன் ஐயப்பா! சரணம் உனக்கென்று! —ஐய||

வற்றாத துயரத்தில் ஆழ்ந்து நின்றாலும்
வளமான சுகபோகம் மூழ்கிச் சென்றாலும்
உற்றாரும் பெற்றாரும் வேறில்லை அய்யா !
வேலவன் சோதரனே ஓங்காரனே என்று ! —ஐய||

பம்பா நதிக்கரையை மருவிய தேவன்
பாருக்கெல்லாம் ஒரு பரமதயாளன் !
பம்பை உடுக்கையின் ஒலிகளின் நாதன்
பரிமளப் பிரியன் சபரிமலை வாசன் ! —ஐய||

# எங்கள் ஸ்வாமியே !

ஓங்காரக் குரலோசை வானோடு விளையாட
உள்ளத்தின் உணர்வோசை உன்பாதப் புகழ்பாட
ஆங்காரம் அழித்த எங்கள் ஸ்வாமியே ! — திவ்ய
அலங்கார மாமணியே சரணம் ஐயப்பா ! — என்றும்
அழியாத தேவனே ஸ்வாமி ஐயப்பா !! —ஓங்||

பூமாலை புரண்டோடி பலகோடி உனை நாட
பூவாத எண்ணங்கள் என்றென்றும் உனைத்தேட
பாமாலை நடமாடும் எங்கள் ஸ்வாமியே ! — தர்ம
சாஸ்தாவே ஜோதியே சரணம் ஐயப்பா ! — அன்பு
சார்ந்தோரைக் காத்திடுவாய் ஸ்வாமி ஐயப்பா! ஓங்||

மலைகளுக்கு மேலாகும் சபரிமலை என்றாக
மகிமைகளின் வீடாகும் ஆலயமே உனதாக
கலைகளையே வென்றவனே எங்கள் ஸ்வாமியே—உண்மைக்
கடலானக் காவலனே சரணம் ஐயப்பா ! —அன்புக்
கண்களுக்கு இனியோனே ஸ்வாமி ஐயப்பா !— ஓங்||

பம்பையிலே நீராடி பம்பையோடு மனமாடி
பாசமிகும் விரதத்திலே அன்பர்களே கூத்தாடும்
நம்பியவர் நாயகனே எங்கள் ஸ்வாமியே ! — சக்தி
கந்தனவன் சோதரனே சரணம் ஐயப்பா !—பக்தி
கொண்டவரைக் காத்திடுவாய் ஸ்வாமி ஐயப்பா! ஓங்||

# பாடுவேன் ஐயப்பா !

## பல்லவி

உன்பாட்டையே பாடுவேன் — ஐயப்பா
உன் ஏட்டையே நாடுவேன் மெய்யப்பா
உன் பாட்டையே பாடுவேன் !

## அநுபல்லவி

இந்நாட்டில் வாழ்ந்தாலும்
எந்நாட்டைச் சேர்ந்தாலும்
என் வாழ்க்கை உன்னோடு
இணைத்துள்ள உணர்வோடு —உன்||

## சரணம்

கண்களுக் கினிதாக அமைந்திடும் காட்சியை
கவிதைகள் போற்றிடும் பார்வையின் மாட்சியை
எண்களில் வைக்காமல் இதயத்தில் எழுதி
இறைவா உனக்காக தமிழாக ஒழுகி ! —உன்||

கருணையின் ஆட்சி சிறந்திடும் மேன்மையை
கலியுக மெல்லாம் தொழுதிடும் பான்மையை
அருணனைப் போலே நிறைமதியாலே
ஆவலின் அலைகள் ஆருகப் பெருகி ! —உன்||

அடைக்கலம் தந்து தழுவிடும் கையாக
அன்புடன் காத்து அருளிடும் நெஞ்சாக
கிடைக்க முடியாத அற்புதப் பொருளாக
காவலின் தெய்யவமும் காலமும் நீயாக! —உன்||

சர்வேஸ்வரன்.

# தில்லை நடராஜன்

## பல்லவி

இல்லை இல்லையே புண்ணியமே !—மனமே
இல்லை இல்லையே புண்ணியமே !!

## அநுபல்லவி

தில்லையின் நடராஜன் திருவடி நினைக்காமல்
தவமும் பிறவும் நீ புரிந்தாலும் —இல்!!

## சரணம்

கிடைப்பதற் கரிதான மனிதப்பிறவி கொண்டும்
கூடிடும் ஆறறிவின் மலைமீதிலே நின்றும்
அடைப்பற்ற அதிகாரம் அரசையுமே அடைந்தும்
அங்கையில் அனலேந்தும் ஐயனை வணங்காமல் —இல்!!

அறுபத்தி மூவரின் திருமுறைகள் கண்டும்
அவற்றின் நாயகன் அற்புதத்தை உணர்ந்தும்
மறுபத்தி ஆயிரம் நடைமுறைகள் புரிந்தும்
மங்கையோர் பாகனை வணங்கா திருந்தால் —இல்!!

ஆதிபராசக்தி அன்னை உறையும் நாதன்
அழகன் முருகனைத் தந்த சங்கீதன்
ஆதிபூசை கொள்ளும் கணபதியும் தந்தோன்
சர்வேஸ்வரனும் அவனடிப் பணியாமல் —இல்!!

# ஜலகண்டேஸ்வரர்

## பல்லவி

கோட்டையில் கோயில் கொண்ட பெருமானே !— வேலைக்
கோட்டையில் கோயில் கொண்ட பெருமானே !
— வேலைக்
குமரனை ஈன்றோனே சிவபெருமானே ! —கோ॥

## அநுபல்லவி

ஏட்டிலும் பாட்டிலும் இமயத்தின் மேட்டிலும்
எழிற்றவம் நீ இருந்தும் அரசினையும் பார்க்க —கோ॥

## சரணம்

நானூறு ஆண்டுகளாய் புறநகரில் இருந்து
நன்மைகள் நடவாமை தெளிவாக நீ தெரிந்து
பாநூறு பனுவல்கள் பணிந்திடவே உழைகக
மறுபடியும் இந்தத் திருவிடமே தழைக்க ! —கோ॥

பாலாறு பாய்ந்தோட சரித்திரங்கள் நடக்க
காங்கேயநல்லூரில் உன் குமரன் இருக்க
[illegible] வென்று மேன்மையுடன் நினைத்து
மேதினி[illegible] மகிழ மீண்டும் அடியெடுத்து —கோ॥

[illegible]ரில் உன் நினை வோங்கிட
ஜலகண்டேஸ்வரர் அதை நீ உணர்ந்திட
தத்திடும் அ[illegible] [illegible]வரியும் விழைய
அடி[illegible] யாவரும் ஒரு[illegible]தாய் துதிக்க ! —கோ॥